Regd. No 2975

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3

# ஸ்ரீ ராமாநுஜன்—278

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 58



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

24—11—1971ல் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:
# ஸ்ரீராமாநுஜன்—278







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது
ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 24 | விரோதிக்ருத்ஸ கார்த்திகையில் கார்த்திகைத் திருநாள் 1—12—1971 | ஸஞ்சிகை 2 |
|---|---|---|

# "கார்த்திகையில் கார்த்திகைநாள் இன்று"

ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாரும், ஆசாரியர்களில் நம்பிள்ளையும் திருவவதரித்த புனிதமான நன்னாள் இந்நாள். இருவருடையவும் பெருமைக் கடலில் சில திவலைகளைப் பருகுவோம். "ப்ரபந்நஜநகூடஸ்தர் பராங்குச பரகால யதிவராதிகள்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையில், பராங்குசராகிற நம்மாழ்வாரோடு பரகாலராகிற திருமங்கையாழ்வாரைப் பிணைத்திருக்கையாலும், உபதேச ரத்தினமாலையில் "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற வவதரித்த" என்று மணவாள மாமுனிகள் விசேஷித்தருளிச்செய்திருக்கையாலும் இவ்வாழ்வார்களிருவர்க்குமுள்ள பொருத்தங்களை [அதாவது, இருவருடையவும் அருளிச்செயல்களிற்காணும் ஒற்றுமைநயங்களை] எடுத்துக்காட்டி ரஸிகர்களை மகிழ்விப்போம்.

1. நம்மாழ்வார் விஸ்தரித்தருளிச்செய்த விஷயங்களைத் திருமங்கையாழ்வார் சுருக்கியருளிச் செய்வர்.
2. அவர் சுருக்கியருளிச்செய்ததை இவர் விஸ்தரித்தருளிச் செய்வர்.
3. சில விஷயங்களை இருவரும் ஸமமாக அருளிச்செய்வர்.
4. சில விஷயங்களில் கலியன் பரிஷ்காரம் காட்டுவர்.

ஆக இந்த நான்கு ப்ரதிஜ்ஞைகளின்கீழ் இருவருடைய பாசுரங்களையு மெடுத்துக் காட்டி ரஸாநுபவம் செய்வோம்.

## 1. நம்மாழ்வார் விஸ்தரித்ததைத் திருமங்கையாழ்வார் சுருக்குவது

**தூதுவிடுதல்;**—நம்மாழ்வார் தலைமகள்பாவனையில் தூதுவிட்டது நான்கு திருவாய்மொழிகள், * அஞ்சிறைய மடநாராய். * வைகல் பூங்கழிவாய், * பொன்னுலகாளீரோ. * எங்கானலகங்கழிவாய் * ஆக இந்த நான்கு பதிகங்களில் நம்மாழ்வார் தூது மிகவிரிவாக நிகழ்ந்திருக்கின்றது. திருமங்கையாழ்வாரால் இது மிகவும் ஸம்க்ஷேபிக்கப்பட்டது. பெரிய திருமொழியில் (3—6) * தூவிரிய மலருழக்கிப் பதிகத்தில் வயலாலி மணவாளனுக்குத் தூதுவிடத் தொடங்கி நான்கு பாசுரங்களோடு அதனை நிறுத்திவிட்டார். மேலே ஒன்பதாம் பத்தில் (9—4) * காவார் மடற்பெண்ணை யென்கிற திருப்புல்லாணிப் பதிகத்தில் (2) * புள்ளினங்காள்! புல்லாணி அன்னமாய் நூல்பயந்தாற்கு ஆங்கிதனைச் செப்புமினே * என்றொரு பாசுரத்தில் மட்டுமே தூதுவிடுதல். திருவிருத்தத்திலுள்ள தூதுவிடுதலுக்குச் சேரத் திருநெடுந்தாண்டகத்திலுள்ளது. இருவருமிரண்டு பாலிரங்கள்.

**நரஸ்துதி விலக்குதல்;**—நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3—9) * சொன்னால் விரோதமிது * என்னும் திருவாய்மொழியில் * சொன்னவில் வாழ்புலவீர்! சோறு கூறைக்காக, மன்னாத மானிடரை வாழ்த்துதலாலென்னாகும்? * என்ற திருவாய்மொழி நூற்றந்தாதிப்படியே நரஸ்துதியை விலக்கினது விஸ்தாரமாகவுள்ளது. இதனைத் திருமங்கையாழ்வார் ஒரே பாட்டில் சுருக்கினார். பெரியதிருமொழி முதற் பதிகத்தில் (7) * இற்பிறப்பறியீர்......கற்பகம் புலவர் களைகணென்றுலகில் கண்டவா தொண்டரைப்பாடும் சொற்பொருளாளீர்! சொல்லுகேன்வம்மின் சூழ் புனற் குடந்தையே தொழுமின் * என்ற பாசுரங் காண்க.

**அனுகரித்துத் தரித்தல்**—திருவாய்மொழியில் (5—6) * கடல் ஞாலம் செய்தேனும் யானேயென்னும் * என்கிற பதிகத்தில் "கடல் ஞாலத்தீசனைமுன் காணமல் நொந்தே, உடனவனுகரிக்கலுற்றுத்—திடமாக வாய்ந்தவனாய்த் தான்பேசும் மாறன் * என்ற நூற்றந்தாதியின்படி, யானே யானே யென்றுசொல்லி எம்பெருமானாகவனுகரித்துப் பேசுதல் விஸ்தாரமாகவுள்ளது. திருமங்கையாழ்வார்க்கு இவ்வநுபவம் ஒரே பாசுரத்தில் சுருக்கமாக நிகழ்ந்தது. பெரியதிருமொழியில் (8—2—6) * வடவரை நின்றும் வந்து, இன்று கணபுரமிடவகை கொள்வது யாமென்று பேசினாள். திருவேங்கடமலையில் நின்றும் திருக்கண்ணபுரத்தேறவந்து சௌரிப்பெருமாளாகக் காட்சிதருவது யானே யென்றது இதில். நம்மாழ்வாருடைய அநுகாரம் தாய்பேச்சால் வெளிவந்தது போலவே இவருடைய அநுகாரமும் தாய்பேச்சாலேயே வெளிவந்ததென்பதும் குறிக்கொள்ளத்தக்கது. * கடல் ஞாலப் பதிகமும் * தெள்ளியீர் பதிகமும் தாய்ப்பேச்சேயன்றோ.

## 2. நம்மாழ்வார் சுருக்கியதைக் கலியன் விரித்துரைப்பது.

பிரளயத்தில் ஸகல தெய்வங்களும் எம்பெருமானுடைய திருவயிற்றில் புகுந்து ரக்ஷைபெறும் விஷயத்தை நம்மாழ்வார் திருவாசிரியத்தில் (7) நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளியிமையவர் தலைவனுமுதலா........

ஒருபொருள் புறப்பாடின்றி முதுவதுமகப்படக் கரந்து, ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமா மாயனையல்லது, ஒருமாதெய்வம் மற்றுடையமோ யாமே! * என்று சுருக்கி யநுஸந்தித்ததைத் திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் (11—6) * மைந்நின்ற கருங்கடல் வாயுலகின்றி * என்கிற பதிகத்தில் (10) * தேவரையு மசுரரையும் திசைகளையுங் கடல்களையும் மற்றும் முற்றும், யாவரையு மொழியாமே யெம்பெருமானுண்டுமிழ்ந்த தறிந்து சொன்ன * என்ற நிகமனப் பாசுரத்தின்படியே விஸ்தரித்தருளிச் செய்தவாறு காண்க.

திருவாய்மொழியில் (5—3) * மாசறுசோதிப் பதிகத்தில் (9) * குதிரியாய் மடலூர்துமே * என்றும், (10) * யாமடலூர்ந்தும் * என்றும், மடலூர்வதான ப்ரஸ்தாவத்தை அதிஸம்க்ஷேபமாகச் செய்தார் நம்மாழ்வார். திருமங்கையாழ்வார் இதனை சிறிய திருமடல் பெரிய திருமடல் என்னும் இரண்டு திவ்வியப் பிரபந்தங் களினால் மிகமிக விஸ்தரித்தருளினார்.

## 3. இருவரும் ஸமமாக அருளிச்செய்தது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3—7) *பயிலுஞ் சுடரொளியிலும், (8—10) * நெடுமாற்கடிமையிலும் அநுஸந்தித்த பாகவத சேஷத்வத்தை திருமங்கையாழ்வார் தமது பெரியதிருமொழியில் (2—6) நண்ணாதவாளவுணர் (7—4) *கண்சோர வெங்குருதி ஆகிய இரண்டு திருமொழிகளில் அநுஸந்தித்தார். திருவாய்மொழியில் (6—6) * மாலுக்கு வையமளந்த பதிகத்தில் "இழந்தது சங்கே, இழந்தது மாமை நிறமே, இழந்தது பீடே, ...... இழந்தது கட்டே" என்று எல்லாமிழந்ததாகத் தாய் பேச்சாலே தெரிவிக்கப்பட்டது. திருமங்கையாழ்வார் தமது திருமொழியில் (8—3) * கரையெடுத்த சுரிசங்கு மென்னும் பதிகத்தில் "இழந்தேனென் வரிவளையே, இழந்தேனென் கனவளையே, இழந்தேனென் சரிவளையே...... இழந்தேனென் பெய் வளையே * என்று தாமிழந்தவற்றைத் தம் திருவாக்கினாலேயே வெளியிட்டார். திருவாய்மொழியில் * கங்குலும் பகலும் பதிகத்தில் தாய் பேச்சாலே *இவள்திறத்து என்செய்கின்றாயே, இவள்திறத்தென் சிந்தித்தாயே .... * என்று எம்பெருமான் திருவுள்ள மென்னவென்று கேட்கப்பட்டது, பெரியதிருமொழியில் (2—7) * திவளும் வெண்மதிபோல் என்கிற திருவிடவெந்தைப் பதிகத்தில் * உன்மனத் தால் என்னினைந்திருந்தாய்? * என்று பாசுரந்தோறும் தாய் பேச்சாலே அந்தக் கேள்வியே நிகழ்ந்தது.

4. நம்மாழ்வார் செய்தருளின அநுபவங்களில் சிலவற்றில் திருமங்கையாழ்வார் பரிஷ்காரம் செய்திருப்பதுமுண்டு. திருவாய்மொழியில் (4—6) * தீர்ப்பாரை யாமினியில் தேவதாந்தரக் கட்டுவிச்சி வந்துபுகுந்தமை சொல்லிற்று. சிறிய திருமடலிலும் திருநெடுந்தாண்டகத்திலும் (11) பகைத்ப்ரஸனையான கட்டுவிச்சி யின் பேச்சு வெளியிடப்பட்டது. திருவாய்மொழியில் (6—7) * உண்ணுஞ்சோறு பதிகத்தில் ஆழ்வார்தாமே தனியே திருக்கோளூர்க்கு நடந்தமை சொல்லிற்று. பெரிய திருமொழியில் (3—7) * கள்வன்கொல் பதிகத்தில் வயலாலி மணவாளன் வந்து ஆழ்வாரைக் கைப்பற்றிக்கொண்டு போனதாகச் சொல்லிற்று.

இங்ஙனே பலவகை யநுபவரஸங்கள் சுவைக்கத் தக்கன.

**கார்த்திகையில் கார்த்திகை நாளில் நம்பிள்ளையும் அவதரித்தமையால் அவருடைய பெருமையைச் சிறுக அநுபவிப்போம்.**

# நம்பிள்ளை வைபவம்

ஸ்ரீவைஷ்ணவ பூர்வாசார்ய பரம்பரையில் ஸ்ரீமந் நாதமுனிகள் தலைமை பெற்றவர். அவருடைய திருவடிகள் உய்யக்கொண்டார். அவருடைய திருவடிகள் மணக்கால் நம்பி. அவராலே திருத்திப் பணிகொள்ளப்பட்டவர் ஆளவந்தார். அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்த பல ஆசிரியர்களில் தலைவர் பெரியநம்பி. அவரை ஆச்ரயித்தவர் எம்பெருமானாரென்கிற ஸ்ரீராமாநுஜர். அவருடைய சிஷ்யர்களில் * ராமாநுஜ பதச் சாயா * என்று ப்ரஸித்தரான எம்பார் தலைமை பெற்றவர். அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்தவர் கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான ஸ்ரீபராசர பட்டர். அவர் எம்பெருமானாரைப்போலவும் அவர்க்கு மேற்படவும் பிரபாவம்மிக்கு விளங்கினார். அவராலே திருத்திப் பணி கொள்ளப்பட்டவர் நஞ்சீயரென்று ப்ரஸித்தரான மேல்நாட்டு வேதாந்திகள். பட்டர் காலத்திலிருந்தே திவ்ய ப்ரபந்தார்த்த ப்ரவசனங்களுக்கு மிக்க சிறப்பு விளைந்தது. நம்பிள்ளை வடக்குத் திருவீதிப் பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை ஆகிய ஆசிரியர்கள் மூவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸர்வஸ்வமான திவ்யப் பிரபந்தங்களுக்குப் புத்துயிரளித்தவர்கள். பிள்ளை லோகாசாரியரும் அப்படியே. இவர்களுள் நம்பிள்ளையின் பிரபாவம் இங்குச் சுருங்கவுரையப்படுகின்றது.

நஞ்சீயருடைய திருவடிகளிலே ஆச்ரயித்தவர்களில் தலைவர் நம்பிள்ளை. இவர்க்கு இயற்கையான திருநாமம் 'நம்பூர் வரதராஜாரியர்' என்பது. ஸ்வாசார்யரான நஞ்சீயர் உகந்து சாத்தின திருநாமம் நம்பிள்ளை யென்பது. அந்தத் திருநாமம் சாத்துகைக்கு அடியென்னென்னில்; நஞ்சீயர் பட்டருடைய நியமனப்படி திருவாய்மொழியின் திவ்யார்த்தங்களை ப்ரவசனஞ் செய்வதையே போது போக்காகக் கொண்டு வாழ்ந்து வந்தார் திருவரங்கம் பெரிய கோயிலில். அவருடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்களில் நம்பூர் வரதராஜாசார்யரும் ஒருவராயிருந்து வந்தார். இவர் நீறு பூத்த நெருப்புப்போல இருந்துவந்தபடியாலே இவருடைய ஞான வைபவம் முதலிய பெருமைகளை விசேஷித்து யாரும் அறியாதிருந்தனர்.

இப்படியிருக்கையில், நஞ்சீயர் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளானுடைய ஆறாயிரப்படியிற் காட்டிலும் சிறிது விரிவாகவொரு வியாக்கியானமிடும்படி பட்டருடைய நியமனம் பெற்றிருந்ததனால் ஒன்பதினாயிரப்படி யென்றொரு வியாக்கியானம் இட்டருளியிருந்தார். அதைச் செவ்வையாகப் பட்டோலை கொள்ள வல்லாரிடம் கொடுத்து எழுதுவிக்க வேணுமென்று கருதி இதற்குத் தகுந்தவர்கள் யாரேனுமுளரோ வென்று அந்தரங்கர்களை விசாரிக்கையில் 'நம்பூர் வரதராஜாசார்யரென்றொருவர் ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டிக்குத் தவறாது வருகின்றாரே;

அவர் நல்ல விரகர்; எழுத்திலும் வல்லவர்; அவரைக் கொண்டு இப்பணியை நிறைவேற்றிக் கொள்ளலாம்' என்று கூறினார்கள். பிறகு அவரை அருகே வரவழைத்து ஆராய்ந்து பார்க்கையில் அவருடைய யோக்யதை ஒப்புயர்வற்றதென்று தெரிய வந்தது; அதனால் உள்ளம் பூரித்து அவர்பால் விசேஷ கடாக்ஷம் செய்தருளித் தம்முடைய ஒன்பதினாயிரப் படியை வரியடைவே அவர்க்கு ப்ரவசனமும் செய்து அதை யெழுதித் தரும்படி ஸ்ரீகோசத்தை அவரிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டவர் தம்மூருக்குச் சென்று எழுதிக்கொண்டு வருவதாகச் சொல்லிப் போகையில் திருக்காவேரியில் நீஞ்சிச் செல்ல நேர்ந்தது; அப்போது திருமுடியில் கட்டிக்கொண்ட அந்த ஸ்ரீகோசம் நெகிழ்ந்து விழுந்து வெள்ளத்திற் போய்விடவே இப்படி அபசாரமாய்த் தலைக்கட்டிற்றே யென்று வருந்த நேர்ந்தது. ஆனாலும் இவர் தாம் அந்த வ்யாக்யானத்தை ஸ்வாசார்யர் திருவடிகளிலே வரியடைவே கற்றிருந்தபடியாலும் அவருடைய கருணா கடாக்ஷத்தை விசேஷித்துப் பெற்றிருந்த படியாலும் அவருடைய திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டே பட்டோலை கொள்ளத் தொடங்கி விரைவில் எழுதி முடித்து ஸ்ரீகோசத்தை நஞ்சீயர் திருவடிகளிலே கொண்டு வைத்தார். 'நாம் கொடுத்த ஏடு எங்கே?' என்று அவர் கேட்கையில், நடந்தது நடந்தபடியே விண்ணப்பஞ் செய்யவேண்டியதாயிற்று. பிறகு நஞ்சீயர் ஸ்ரீகோசத்தை அவிழ்த்துக் கடாக்ஷிக்கையில், தாமருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் விடாமலும் தம்மிடம் அவர் கேட்டிருந்த சில அர்த்த விசேஷங்களும் பொருத்தமாக அமைந்தும் விரிவுமில்லாமல் இருந்த அழகுக்கு மிகவுகந்து 'வாரீர் நம்முடைய பிள்ளையே!' என்று எடுத்தணைத்துக் கொண்டார். அது முதலாக நம்பிள்ளை யென்றே இவர் வழங்கப்பெற்று வந்தார். திருக்கலிகன்றிதாஸர் என்பதும் இவர்க்கு நஞ்சீயர் சாத்தின திருநாமம்.

இவருடைய ஞான வைபவத்தைப் பற்றி நாம் விரிவாக எழுத வேண்டுமோ? பெரிய திருமொழி வ்யாக்யானத்தில் (5—8—7) *ஓதுவாய்மையு முவனியப் பிறப்புமுனக்கு முன் தந்த அந்தண* என்ற விடத்து "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்கு உடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச் செயலிலே யாம் நம்பிள்ளையைப் போலே" என்று பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தி யொன்றே இவருடைய ஞானப்பெருமையை விளக்கக் கூடியது. திவ்ய ப்ரபந்தங்களுக்கும் இதிஹாஸ புராணாதிகளுக்கும் ஆழ்ந்து இன்சுவையே வடிவெடுத்த அர்த்தங்களை யருளிச்செய்வதில் இவர்க்கு ஒத்தாரும் மிக்காருமில்லை.

லோகாசார்யரென்கிற திருநாமமும் இவர்க்கு உண்டு. அது நிகழ்ந்த வரலாறு கேண்மின்; இவர் கோயிலில் வாழ்ந்த காலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இவர் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸகலார்த்தங்களும் கேட்டு வந்தார்கள். 'நம்பெருமாள் கோஷ்டியோ நம்பிள்ளை கோஷ்டியோ' என்னும்படி மிகப்பெரிய சிஷ்ய கோஷ்டி ஸம்பத்துடன் வாழ்ந்து வந்தார். அப்போது, முதலியாண்டான் திருப்பேரனான கந்தாடைத் தோழப்பரும் அங்கு வாழ்ந்து வந்தார். அவரும் வித்வானா யிருக்கச் செய்தேயும் அவரிடத்தில் ஒருவரும் ஆச்ரயியாதிருக்கவே

அவர்க்குப் பொருமை யுண்டாகி ஒரு நாள் நம்பிள்ளையைப் பெருமாள் கோஷ்டியிலே திரஸ்காரமான வார்த்தைகளைச் சொல்லிப் பரிபவித்து விட்டுத் திருமாளிகைக்கெழுந்தருளினர். அவருடைய தேவிகள் இந்த அஸஹ்யாபசாரத்தை யறிந்து கண்ணுங் கண்ணீருமாக வந்து 'அந்தோ! இப்படியும் பரமாசார்யர் திருவடிகளிலே அபசாரப்படுவீரோ? உமக்கு உய்யும் விரகுண்டோ? என் செய்தீர்! என் செய்தீர்! ஐயோ' என்று பலவுஞ்சொல்லி அநுதாபத்தை யுண்டாக்க, தோழப்பரும் அநுதபித்து நம்பிள்ளை திருவடிகளிலே சென்று க்ஷமை வேண்ட வேணுமென்று பாரித்திருந்தார். அதற்குள்ளே நம்பிள்ளை தாமே தோழப்பர் திருமாளிகை யேற வந்து வேரற்ற மரம்போலே விழுந்து தெண்டனிட்டு, தேவரீருடைய திருவுள்ளம் கன்றும்படி வர்த்தித்த அடியேனுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லையென்று பலவுமருளிச் செய்து தாம் க்ஷாமணம் பண்ணிக்கொண்டார் அப்போது தோழப்பர் அந்த மஹா குணத்திற்கு வியந்து "ஸ்வாமிந்! தேவரீரை இத்தனை நாளும் சிறிதுபேர்களுக்கு ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யர் தேவரீர் என்று திண்ணமாகக் கொண்டேன்" என்றார். அது முதலாக நம்பிள்ளைக்கு லோகாசார்யரென்று திருநாமம் வழங்கி வந்தது; "துன்னு புகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம் முகப்பால் என்னவுலகாரியனோ வென்றுரைக்க, பின்னை யுலகாரியனெனும் பேர் நம்பிள்ளைக் கோங்கி, விலகாமல் நின்றதென்றும் மேல்" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் இங்கே அநுஸந்திக்கத் தகும்.

நம்பிள்ளை திருவடிகளில் பலர் ஆச்ரயித்திருந்தாலும் பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு இருந்த ஆசார்ய பக்தி ஒப்பற்றதென்று தெரிகின்றது; உபதேசரத்தின மாலையில் "பின் பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தில் அன்பதுவுமற்று மிக்க வாசையினால், நம்பிள்ளைக்கான வடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே! ஊனமற வெப்பொழுது மோர்" என்று விசேஷித்து அருளிச் செய்கையாலே.

இப்பேராசிரியரின் திருவடிகளில் பணிந்து அல்லும் பகலும் ஸகலார்த்தங்களையுங் கேட்டுத் தரித்த வடக்குத் திருவீதிப் பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் உலகுக்குச் செய்திருக்குமுபகாரம் கைம்மாறற்றது.

பட்டருடைய சந்ததியில் தோன்றி மஹா வித்வானுயிருந்த நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரும் கந்தாடைத் தோழப்பர் போலவே நம்பிள்ளையிடத்தில் பொருமை கொண்டிருந்தவர். அவர் ஒருநாள் ராஜ ஸபைக்குச் சென்றிருந்தார். அந்த ராஜா மஹா விவேகியுமாய், தன்னிடம் வருகிற பண்டிதர்களை யெல்லாம் ஸ்ரீ ராமாயணாதி க்ரந்தங்களில் கேள்வி கேட்பவனுமா யிருந்தபடியால் இந்த பட்டரையும் ஸ்ரீ ராமாயணத்தில் ஒரு கேள்வி கேட்டான். அதாவது: ஸ்ரீ ராமபிரான் நாராயணத்வ ப்ரயுக்தமான பரத்வத்தை மறைத்துக்கொண்டு அஜ்ஞனைப் போலவும் அசக்தனைப் போலவும் அவதரித்திருக்கையில் "மயா த்வம் ஸமநுஜ்ஜாதோ கச்ச லோகாநநுத்தமாந்" என்று ஜடாயுவுக்கு முத்தி யளித்தது எங்ஙனே பொருந்தும்?—என்று. இக் கேள்விக்கு த்ருப்திகரமான விடையளிக்க பட்டருக்கு ஸ்புரியாமையாலே ஆலோசிக்க வேண்டியதாயிற்று. அப்போது ராஜாவும் அந்ய பரனுயிருக்க, இவருடைய பாக்யவசத்தாலே அங்கு ஒரு ஸ்வாமி தென்பட்டார்.

# சந்தாதாரர்களுக்கு அறிக்கை

ஸ்ரீராமாநுஜன் சந்தாதாரரான அனைவர்க்கும் இதனால் தெரிவிப்பது யாதெனில்; நமது ராமாநுஜன் பத்திரிகை சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன சபையின் சார்பாக நடந்து வருகின்றதென்பது உங்களுக்குத் தெரிந்ததே. அந்த ஸபைக்கு நான் பிரஸிடெண்டாக இருப்பது தவிர (காஞ்சீபுரத்தில்) கார்யதர்சியாகவுமிருந்து காரியங்களை கவனித்துவந்தேனிதுவரையில். எனது அசக்தியின் மிகுதியினால் பத்ரிகைக்கு வியாஸமெழுதுவ தொன்றுதவிர மற்று எந்தகாரியத்தையும் கவனிக்க இயலாதென்று ஸபையின் அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொண்டேன். அவர்கள் இது யுக்தமானதே யென்றுகொண்டு ஸபையின் கார்யஸ்தராக ஒருவரை காஞ்சீபுரத்திலேயே யிருந்து கவனித்துக்கொள்ளும்படி நியமித்திருக்கிறார்கள். அவருடைய பெயர் ஸ்ரீமான் K. வெங்கடேச்வரலு குப்தா என்பது. விலாஸம் c/o க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3. இனிமேல் ராமாநுஜனைப்பற்றின ஸகல விவகாரங்களும் ஷை காரியதரிசியின் வழியாகவே ஆகவேணும். சந்தா பண மனுப்புவதோ, கிடைக்காத பத்ரிகைகளை யனுப்பும்படி தெரிவிப்பதோ, புதிய சந்தா தாரராகச் சேர்த்துக்கொள்ள வேணுமென்று தெரிவிப்பதோ எதுவும் அந்த விலா சத்திற்கே யாகவேணும். பழைய வாஸனையாலே நமக்கெழுதினாலும் நம் பேருக்கு M. O அனுப்பினாலும் ஷை காரியதர்சியிடமிருந்தே பதில் கிடைக்கும்.

## — முக்கியமான அறிவிப்பு —

மணவாள மாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு மஹோத்ஸவ ஸந்தர்ப் பத்தில் 25 ரூபாய் செலுத்தினவர்களுங்கூட இனி சந்தா செலுத்தியே யாக வேண்டும். அப்படி 25 ரூபா செலுத்தினவர்கள் அசக்தர்களாயிருந்தால் வருஷந் தோறும் 5 ரூபாயாவது செலுத்தி வரவேணும். அப்போது 25 ரூபாய்க்கு மேல் 40, 50 செலுத்தினவர்கள் மட்டும் இனி சந்தா செலுத்த அவசியமில்லை. சென்ற (71ஹு) மார்ச்சு மாதத்திற்குப் பிறகு சந்தா செலுத்தினவர்கள் இப்போதே சந்தா அனுப்பவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. அவரவர்கள் செலுத்தின மாதத்தி லிருந்து பன்னிரண்டாவது மாதத்தில் செலுத்தலாம். மற்றவர்கள் வருகிற டிஸம் பருக்குள் சந்தா செலுத்தாவிடில் அவர்களுக்குப் பத்திரிகை கிடைக்காது. நிறுத் தப்படும். இதற்கு ஏதாவது பதில் தெரிவிக்க விரும்புமவர்கள் விரைவில் தெரி விப்பது. ஒன்றும் தெரிவியாமலிருப்பவர்கள் பத்ரிகையை விரும்பாதவர்களென்று கொள்ளப்படுவர்கள்,

காரியதரிசியின் விலாஸம்—
K, வெங்கடேச்வர்லு குப்தா,
c/o க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

இப்படிக்கு:
P. B. அண்ணங்கராசாரியர்,
பத்ரிகையாசிரியர்.

---

கவனிக்கவேண்டிய குறிப்பு;—ஆப்தர்கள் எனக்கெழுதும் கடிதங்களை நானே நேரில் வாசிக்கவேணுமானால் நுணுக்கியெழுதாமல் விட்டுவிட்டு ஸ்புடமாக எழுத வேணும்.

—P.B.A.

அவர் நம்பிள்ளை திருவடிகளில் அர்த்த விசேஷங்கள் கேட்டவர்; இந்த பட்டர் அவரை அருகே வரவழைத்துச் செவியோடு செவிமடுத்து 'இவ்வரசன் கேட்ட கேள்விகளுக்கு நம்பிள்ளை எப்படி நிர்வஹிப்பது?' என்று கேட்டார். அவர் "ஸத்யேந லோகாந் ஜயதி" என்கிற ச்லோகத்தைக் கொண்டு நிர்வஹிப்பர் என்று சொல்ல, அதை இவர் தமது மனதில் நன்ருக வாங்கிக்கொண்டு பிறகு ராஜாவிடம் உபந்யஸித்தார், அரசனும் பிறகு உகந்து விசேஷ ஸத்காரங்கள் செய்தான். அந்த ஸத்காரங்களை ப்ராமாணிகரானவிவர் தம் க்ருஹத்திற்குக் கொண்டுபோக விரும்பாமல் நம்பிள்ளை திருவடிகளிலே கொண்டு ஸமர்ப்பித்து தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளில் சிந்திப்போன வொரு சொல்லுக்குப் பெற்ற ஸத்காரமிது; இனி அடியேனை அங்கீகரித்தருளி வாழ்விக்க வேணுமென்று வேரற்ற மரம்போல விழுந்து ப்ரார்த்திக்க, அவரையும் சேர்த்துக்கொண்டு உய்வித்தார். நம்பிள்ளையின் பகவத் விஷயோபந்யாஸங்களை அவரும் ஏடுபடுத்தி ஸபாதலக்ஷம் க்ரந்தமாக்கியிருந்தார். அதிகாரி தௌர்லப்யத்தைக் கணிசித்து அதை நம்பிள்ளை ப்ரசாரத்திற்கு நியமித்தருளவில்லை.

நம்பிள்ளையின் வைபவம் அர்த்த விசேஷங்களைப் பொறுத்ததேயாதலால் அவ்வர்த்த விசேஷங்கள் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலும் வார்த்தாமாலை முதலியவற்றிலும் பாக்யசாலிகளால் உய்த்து உணரத்தக்கன. ... ... *

இப்பேராசிரியருடைய தனியன் ;

வேதாந்த வேத்யாம்ருத வாரிராசே: வேதார்த்த ஸாராம்ருத பூரமக்ர்யம்,
ஆதாய வர்ஷந்தமஹம் ப்ரபத்யே காருண்ய பூர்ணம் கலிவைரி தாஸம்."

---

# அருளாளப்பெருமாளெம்பெருமானர்

இவ்வாசிரியர் கார்த்திகைத் திங்களில் பரணீ நக்ஷத்திரத்தில் திருவவதரித்தவர். யஜ்ஞமூர்த்தி யென்கிற திருநாமங்கொண்ட அத்வைதி வித்வானக இருந்து, திருவரங்கம் பெரியகோயிலில் எம்பெருமானரோடு பதினெட்டுநாள் வேதாந்த வாதப் போர்புரிந்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்த தத்துவங்களைத் தெளியவுணர்ந்து ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து உத்தமாச்ரமியாகி அருளாளப் பெருமா ளெம்பெருமானரென்று திருநாமம் பெற்று ஸ்வாமியின் திருவடிகளிலேயே நிழலும் அடிதாறுமாகவிருந்து வாழ்ந்தவர். இவரருளிச்செய்த க்ரந்தங்கள் ஞானஸாரமும் ப்ரமேயஸாரமும். இவருடைய திருக்கோலம் கச்சிப் பாடகம், ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான திவ்யதேசங்களில் விளங்காநின்றது.

ஞானஸாரப்ரமேயஸாரங்கள் நம்முடைய உரையுடன் விலை 1—50.

# ஆழ்வார்திருநகரியில் மாறன் உபயவேதாந்த பாடசாலை

நல்லார்நவில் குருகூரென்று ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் நம்மாழ்வாரால் புகழப் பெற்ற திருக்குருகூரில் உடயவேதாந்த வித்யாபிவிருத்தி ஏழெட்டு வருஷகாலமாக மிகவும் சிறப்புற நடைபெற்றுவருகின்றது. உபயுக்த வேதபாகங்கள் திவ்யப்ரபந்தங்கள் ஸ்தோத்ர பாடங்கள் இவை ஏறக்குறைய அறுபது வித்யார்த்திகளுக்குக் கற்பிக்கப்பட்டு வருவதை அடியேன் சென்ற ஸம்வத்ஸரத்தில் கண்ணாரக் கண்டு அநுபவித்துக்களித்தேன். "ஆரம்பசூரா: கலு தாக்ஷிணாத்யா:" என்கிறபடியல்லாமல் ப்ரவர்த்தகர்கள் மிக்க ச்ரத்தையோடு அரும்பாடுபட்டு நடத்தி வருவதால் ஓங்கும் புகழுடனே உயர்த்தி பெற்று நடந்துவருகின்றது. ஸந்நிதி முன்னணியில் ஒரு மஹா மண்டபத்தில் பாடசாலை நடந்து வருகின்றது. இங்குக் காட்சிதரும் கோஷ்டியில் அந்வயித்திருக்கின்றவர்களெல்லாரும் வித்யார்த்திகளே. மூலதனமொன்றுமில்லாமல் யாசக வ்ருத்தியிலேயே நடத்தப்பட்டு வரும் இப்பாடசாலைக்கு ஆஸ்திக தனிகர்கள் இயன்றவுதவி புரியவேணும். ஆழ்வார்திருநகரி வடக்கு ரதவீதியில் ஸ்ரீமத் பெரியநம்பி திருமாளிகையில் இதன் கார்யாலயமுள்ளது. பொருளுதவிபுரிய விரும்புமவர்கள் அவ்விடத்திற்கனுப்பலாம்.



# டில்லியில் மணவாளமாமுனிகள் திருவவதாரோத்ஸவ வைபவம் (1971)

பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயரால் புதுடில்லியில் கடந்த வருஷம் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீராம மந்திர் திருக்கோயிலில் மாமுனிகளின் திருநட்சத்திரோத்ஸவம் இவ்வருடம் (1971) அக்டோபர் 24-ம் தேதியிலிருந்து 10 நாட்கள் வெகு விமரிசையாக நடந்தேறியது. காலையில் திருமஞ்சனம், சேவை சாத்துமுறை, சாயங்காலம் நியாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ.வே. பிள்ளைலோகம் பாஷ்யகார் ஸ்வாமியின் ப்ரவசனம், விசேஷ ப்ரஸாத விநியோகங்கள் என்ற அடைவில் தினப்படி நிகழ்ச்சி நிரல் அமைந்திருந்தது. முன்னாள் ஜட்ஜு ஸ்ரீ ஜஸ்டிஸ் R. L. நரசிம்மன் அவர்கள் உத்ஸவத்தை ஸம்ஸ்க்ருத சொற்பொழிவுடன் துவக்கிவைத்தார். சாற்றுமுறை தினமான நவம்பர் 2-ந்தேதி டில்லி ஐகோர்ட் ஜட்ஜு ஸ்ரீ ஜஸ்டிஸ் T. V. R. தாதாசாரியார் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்வாமிக்கு பொன்னுடை போர்த்து சன்மானம் வழங்கி கௌரவித்தார். அச்சமயம் சுமார் ஆயிரம் பக்தகோடிகள் கோஷ்டியில் அந்வயித்தது குறிப்பிடத்தக்கது. விழா வெகு சிறப்பாக நடந்ததற்கு ஸ்ரீ E. வைகுண்டமய்யங்கார் முதலான ஆஸ்திக பெருமக்களின் சலியாத உழைப்பு காரணமாகும்.

---

# மணவாள மாமுனிகளின் 6-வது நூற்றாண்டு பூர்த்திவிழா

(40-ம் பக்கந் தொடர்ச்சி)

முன் பக்கங்களில் டில்லி, மதராஸ் நகரங்களில் மாமுனிகளின் ஆறுவது நூற்றாண்டு நிறைவு விழாவின் விவரம் கொடுத்துள்ளோம். இந் நகரங்களைத் தவிர ஸ்ரீரங்கத்தில் கோயில் மணவாள மாமுனிகள் சன்னிதியில் யதிராஜவிம்சதி உபதேசரத்தினமாலை முதலான ஸ்வாமியின் பத்யரூபமான பிரபந்தங்களை சலவைக் கல்லில் பொறித்தும், ஸ்ரீமுஷ்ணத்தில் மாமுனி சன்னிதி ஜீர்ணோத்தாரணம் செய்தும், திருவயிந்திரபுரத்தில் திருவாய்மொழி மண்டபம் நிர்மாணித்தும், காஞ்சியில் தேவப்பெருமாள் சன்னிதியில் கோயில் கொண்டிருக்கும் மணவாளமாமுனி சன்னிதி விமான ஜீர்ணோத்தாரணத்திற்கு ஏற்பாடு செய்தும், ஸ்ரீபெரும்பூதூரில் முதலியாண்டான், எம்பார் இவர்களுடைய அவதாரஸ்தல மூர்த்திகளை ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளச்செய்து அவர்களோடும் கூரத்தாழ்வானோடும், மாமுனிகள் எம்பெருமானாரை மங்களாசாஸனம் செய்தும் விழா விமரிசையாக நடந்தேறியது.

பம்பாய் விருந்தாவனம் முதலிய வடநாட்டு க்ஷேத்திரங்களில் உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்கள் அதிகமாக கலந்துகொண்டு உத்ஸவத்தைச் சிறப்பிக்கச் செய்தது குறிப்பிடத்தக்கது.

பம்பாயில் ஸ்ரீப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு (வைகுண்டவாஸி) அனந்தாசாரியார் ஸ்வாமியால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ வெங்கடேச தேவஸ்தானத்தில் 1970-ம் வருஷம் ஜூன் 11 ந்தேதியிலிருந்து 10 நாட்கள் "ஈடு உத்ஸவம்" நடத்தி 600-ஆண்டு நிறைவு விழாவை உத்காடனம் செய்தனர். கூடவே ஸ்ரீ P. B. A. ஸ்வாமிபோன்ற வித்வான்களுடைய வியாசங்கள் அடங்கிய ஒரு சிறப்பு மலரையும் வெளியிட்டனர்.

விருந்தாவனத்தில் ஆதி ஸ்ரீகோவர்த்தனம் ரங்காச்சாரியார் ஸ்வாமியால் நிர்மாணிக்கப்பட்ட கோதை-ரங்கமன்னார் சன்னிதியில் ஆசார்ய சார்வபௌமரின் 6-வது நூற்றாண்டு பூர்த்தி விழாவைப் பத்து நாட்கள் விசேஷ நிகழ்ச்சிகளுடன் 'ந பூதோ ந பவிஷ்யதி' என்னும்படி வ்ரஜவாஸிகள் கொண்டாடின வைபவம் வாசாமகோசரம். இச் சரித்திரபூர்வமான சம்பவத்தின் சாச்வத ஞாபகார்த்தமாக வரவரமுனிகளின் காஞ்சலிக்கும் த்ரிதண்டத்திற்கும் பக்தகோடிகள் வைர கவசங்கள் சமர்ப்பிக்க ஏற்பாடு செய்துள்ளனர்.

சுபமஸ்து.

# "நிறை குடம்"

(அருங்கலைக்கோன். வித்வான். டாக்டர் N. ஸுப்பு ரெட்டியார், M.A., திருப்பதி, எழுதுகிறார்)

திருமலை திருப்பதி. கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடம் Principal, ஸ்ரீமதுபயவே V. S. வேங்கடராகவாசாரியர் ஸ்வாமி இங்கு ஸேவை ஸாதிக்கின்றார். இந்த ஸ்வாமியின் பாண்டித்ய விசேஷத்தையும் பெரும்புகழையும்பற்றி இங்குச் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம்.



விழுப்புரத்தின் அருகிலுள்ள வேங்கடாத்ரியகரம் என்கிற அக்ரஹாரம் பல பல பண்டிதர்களைத் தோற்றுவித்த ஊர். அங்குத் தோன்றியவர் நம் ஸ்வாமி. திருவையாற்றுக் கல்லூரியில் ஏழாண்டு கல்வி பயின்று 1930-ஆம் ஆண்டில் மீமாம்ஸா சிரோமணி பட்டம் பெற்றார். அதன்பிறகு தனியாக ஆங்கிலம் பயின்று 1949ல் B.A., B.T., பட்டம் பெற்றார். மீண்டும் வடமொழி பயின்று B.O.L., M.A. பட்டங்கள் பெற்றார்.

## — ஆசிரியருடைய அநுபவங்கள் —

சென்னையிலுள்ள இராமகிருஷ்ண வித்யாலயங்களில் 1930ஆு ஜூன் முதல் சமஸ்கிருத ஆசிரியராகப் பணியாற்றியவர்; 1947-இலிருந்து சென்னை விவேகானந்தா கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து பி.ஏ., எம்.ஏ., மாணவர்கட்கு சமஸ்கிருத இலக்கண இலக்கியங்கள், சாஸ்திரங்கள் போதித்தவர். 1962 செப்டம்பர் முதல் மத்திய அரசு நிறுவிய திருப்பதி கேந்திரீய ஸமஸ்கிருத வித்யா பீடத்தில் பணியாற்றி வருபவர். சமஸ்கிருத பண்டிதர்க்கு சமஸ்கிருதம் பயிற்றுவிக்கும் துறைத் தலைவராக இருந்து இதுவரை 400 பண்டிதர்களைப் பயிற்றுவித்து "சிக்ஷா சாஸ்திரி" என்ற பட்டங்கள் வழங்கக் காரணமானவர். இவர்மூலம் சமஸ்கிருதம் M.A பட்டம் பெற்றவர்கள் 60க்கு மேல்; சிக்ஷா சாஸ்திரி பட்டம்பெற்றவர்கள் 400 பேர். இந்த 42 ஆண்டுக் காலத்தில் 10 ஆயிரத்திற்குமேல் இவரிடம் பயின்றவர்கள் உளர். "குலபதி" என்ற விருதுக்கு அருகதை யுள்ளவர்.

## — இவர் இயற்றிய நூல்கள் —

(1) 1953—காளிதாசரின் 'ரகுவம்சம்' முழுவதற்கும் எளிய நடையில் பதவுரை, கருத்துரை, விசேட உரையுடன் தமிழில் வெளியிட்டுள்ளார். இந்த முயற்சியைப் பாராட்டி காஞ்சி காமகோடிபீட ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் விலையுயர்ந்த சாதராவை அளித்தார் (நூல் வெளியீட்டு விழாவின்பொழுது)

(2) "குமாரசம்பவம்"—இந்நூலுக்கும் இம்மாதிரியே பதவுரை முதலியன எழுதி வெளியிட்டார்.

வேறுநூல்கள் பல இவர்கள் வெளியிட்டாலும் இவை இரண்டும் குறிப்பிடத் தக்கவை.

(3) 1968-ல் "பாரதீயம் வ்ருத்தம்" இது மொழிபெயர்ப்பு நூல் (வட மொழியில்). இது ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் ஸமஸ்கிருத பேராசிரியராக இருந்த 'மக்டானல்' என்பவரால் எழுதப்பெற்ற 'இந்தியாவின் பழமை' என்ற ஆங்கில நூலின் வடமொழி பெயர்ப்பு;

(4) "சிக்ஷா மனோ விக்ஞானம்" (1971இல்) இது மனோதத்துவ நூல். மேனாட்டவர் மனோ தத்துவத்தைக்குறித்து எழுதியுள்ள கருத்துக்களையும், நம் நாட்டு சாஸ்திரக்காரர்கள் மனம்பற்றிக் கூறும் கொள்கைகளையும் சேர்த்து சுதந்திரமாக தெள்ளிய சமஸ்கிருதத்தில் எழுதப்பெற்ற நூல் இது.

(5) "போலி வைத்யர்" என்ற தலைப்பில் பிரான்ஸ் நாட்டு மாலிவ் என்ற ப்ரஹஸன ஆசிரியர் எழுதிய நூலை (நாடகம்) "வைத்ய பந்து" என்ற பெயரில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது.

(6) ஸ்ரீமாந் வேங்கடராகவாசாரியார் திருத்தகப்பனார் ஸ்ரீநிவாஸ வரதாசாரியார்; அவருடைய தந்தையார் ஸ்ரீநிவாஸராகவாசாரியார்; அவர் தந்தையார் ஸ்ரீ சேஷாத்ரியாசாரியார். வேங்கடவன் பெயரோடு இயைந்த பெயரையே வைத்துக்கொள்ளுவது இவர்களின் குலவழக்கம் என்பதாகக் கேள்வியுற்றேன்.

(7) வடமொழி பயின்ற பலரிடம் தமிழறிவு காண்பது அரிது. இவரோ தீந்தமிழில் பேசவும் எழுதவும் வல்லவர். ஒருமுறை ராஜாஜி அவர்களே இவரது தமிழறிவை மெச்சினதாக அறிகிறேன்.

(8) வடமொழி அறியாதவர்களும் புரிந்துகொள்ளும்வண்ணம் நல்ல சமஸ்கிருதத்தில் ஹாஸ்யத்துடன் பேசி கேட்போரனைவரையும் ஈர்க்கும் ஆற்றல் இவரிடம் இயல்பாகவே அமைந்து கிடக்கின்றது.

(9) சிறந்த ஆசான். மனோதத்துவ வல்லவரான இவருக்கு போதிக்கும் ஆற்றல் எளிதாகக் கைவந்த வித்தை. ஆழ்ந்த சமஸ்கிருத ஞானமும் இத்துடன் சேர்ந்து இவரை "உண்மை ஆசான்" ஆக்கியது.

(10) எவருடனும் எளிதாகப் பழகும் இயல்பினர்; இன்முகத்துடன் உரையாடும் பண்பினர். அடக்கமே உருவான நிறைகுடம். பதவிச் செருக்கோ புலமைச் செருக்கோ இவரிடம் மருந்துக்கும் அகப்படாது. President தரும் Awardக்கும் அருகதையுள்ளவர் என்று சொல்லின் அது மிகையன்று. (பத்மஸ்ரீ போன்ற பட்டங்கட்கும், உபகாரச் சம்பளத்திற்கும்)

## — பாராட்டு —

இருமுறை காஞ்சி காமகோடிபீட ஸ்ரீ சங்கராசாரியாரின் பாராட்டுகள் பெற்றவர். அண்மையில் "ஸாஹித்ய வல்லப" என்ற விருது பெற்றதை நாம் அறிவோம். ஸ்ரீமத் ஆசாரிய சுவாமிகளிடம் விருதுபெறுவது எளிதன்று. பல முறையும் புடம்போட்டு சோதித்து பின்பே பிருதுதந்து கௌரவிக்கும் தன்மையுடையவர் ஸ்ரீ சுவாமிகள் என்பதை நாம் அறிவோம்.

---



# கண்ணும் அண்ணும் பேசியவை

(முன்னிதழ்த் தொடர்ச்சி)

கண்ணு:— அன்று நான் வந்தபோது 'மணவாள மாமுனிகளுத்ஸவா நுபவத்திலிருக்கிறேன், இப்போது அவகாசமேயில்லையே!' என்றுயே அண்ணு! இப்போது உனக்குப் பரிபூர்ணமான ஓய்வு இருக்குமென்றெண்ணிப் பல நாழிகைகள் பேச ஆவலுடன் வந்திருக்கிறேன். ஓய்வுதானு இப்போது?

அண்ணு:— எனக்கு ஓய்வு என்பது இப்பிறப்பில் இல்லை; மறுபிறப்பில் நேருமோ என்னவோ அறியேன்.

கண்ணு:— உனக்கு மறுபிறப்பு பிறக்கவேணுமென்றுகூட ஆசையிருக்கிறதோ? முதல்நாள் என்னேடு வார்த்தை சொன்னபோது "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்கிற கீதா ச்லோகத்தை தடபுடலாகச் சொன்னுயே, மறந்துவிட்டாயா? "புனர் ஜந்ம நைதி" என்றதில் உனக்கு ஸந்தேஹம்போலும். "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்கிற கீதா ச்லோகத்தின் பொருளில் சிலர்க்குப்ரமமுண்டு; உனக்குக்கூட அந்த ப்ரமமிருப்பதாக நினைக்கிறேன். என் எதிரிலேயே "மறுபிறப்பில்" என்கிருயே, என்ன இது?

அண்ணு:— என்றுமெனக்கினிய கண்ணு! நான் கீதைக்கு நான்கு பாஷைகளிலும் விவரணங்கள் எழுதியிருக்கிறேன்; நீ நினைக்கிறபடி எனக்கு லவலேசமும் ப்ரமமில்லை; ஆத்மாவுக்குப் பிறப்புமில்லை இறப்புமில்லை; சரீரத்திற்கே இவையிரண்டுமுள்ளது என்பதையும், இதைத்தான் அந்த ச்லோகம் சொல்லுகிறதென்பதையும் நன்கறிவேன். உன்னை [அஜாயமாந:— பிறப்பிலி] என்று சொல்லச் செய்தேயும் [பஹுதா விஜாயதே—எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்] என்றும் சொல்லியிருப்பதுபோல, [புநர் ஜன்ம நைதி] என்னச் செய்தேயும் புநர் ஜன்மமுண்டு என்றுதான் நான் நினைத்திருக்கிறது.

கண்ணு:— அசாஸ்த்ரீயமான அர்த்தத்தை அண்ணு! நீ சுதந்திரமாகச் சொல்லிவிட்டால் நான் கேட்டுக்கொண்டுபோய்விடுவேனே? ¤மீட்சியின்றி வைகுந்தமாநகர்¤ என்கிருர் நம்மாழ்வார்; ¤போயினுற் பின்னை யித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும் போக வொட்டாரே¤ என்கிருர் பெரியாழ்வார். இதற்கெல்லாம் முரணுகப் புநர்ஜன்மமுமுண்டென்கிருயே! இதென்ன? எனக்கு விளங்கச் சொல்லு.

அண்ணு:— என்னெஞ்சகம் கோயில் கொண்ட கண்ணு! நம்மாழ்வார் ஸாதித்ததும் பெரியாழ்வார் ஸாதித்ததுந்தான் உனக்குத் தெரியும் போலும்; திருமங்கையாழ்வார் ஸாதித்ததை அறியாய்போலும். அவர் மோக்ஷமென்கிற வஸ்துவே கிடையாதென்று ஒரேயடி அடித்துவிட்டாரே, அது தெரியாதோ வுனக்கு? தர்மார்த்தகாம மோக்ஷங்களென்று நான்கு புருஷார்த்தங்களுள்ளனவாகச் சொல்லுவது அபத்தமென்று, ¤இப்பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே, அம்மூன்றுமாராயில் தானே அறம்பொருளின்பமென்று¤ என்று ஸாதித்ததோடு நில்லாமல், ¤மற்றுரானுமுண்டென்பாரென்பது தானதுவும், ஓராமையன்றே உலகத்தார் சொல்லுஞ்சொல்¤ என்று, மோக்ஷமென்று ஒன்று உண்டென்பவர்கள் அவிவேகிகளன்றே என்று பரிஹஸித்துமிருக்கிருர் என்பது தெரியாதோவுனக்கு?

கண்ணு:— அது சிறியதிருமடலிலன்று? அது தெரியுமெனக்கு. பெரிய திருமடலில் ☼மன்னு மறம் பொருளின்பம் வீடென்றுலகில், நன்னெறி மேம்பட்டன நான்கன்றே☼ என்று மோக்ஷத்தையும் இசைந்து பேசியிருக்கிருரே, அது உனக்குத் தெரியாதோ அண்ணு!

அண்ணு:— என் சிந்தனைக்கினிய கண்ணு! அது எனக்கு ஏன் தெரியாமல்போகும்? தெரியும், நன்ருகத் தெரியும். உடனே என்ன ஸாதிக்கிருரென்பதை நீ நோக்கவில்லையே. மோக்ஷமுண்டென்கிற வார்த்தையைப் பரிஹாஸம்பண்ணியல்லவா முடித்திருக்கிருர், நாமெல்லாரும் வெளியூர்களுக்குப்போனல் 'இன்னவூருக்கு வந்திருக்கிறேன், இன்னது செய்து கொண்டிருக்கிறேன், இன்ன நாளில் வருகிறேன்' என்று கடிதமெழுதுகிருேமே; மோக்ஷம் போனவர்கள் அப்படி யாரேனும் எழுதியிருப்பதுண்டா? என்றெல்லாம் கேட்டிருக்கிருரே கண்ணு! அந்தக் கேள்விக்கு நீதான் விடை கூறவல்லையே?

கண்ணு.— என்பாலன்பு பூண்ட அண்ணு! கிணறு வெட்டப்போனல் பூதம் புறப்பட்டதென்கிற கதையாயிருக்கிறதே. நான் ஏதேதோ பேசவேணுமென்று வந்தால் விரஸமான பேச்சு மேன்மேலும் வளருகிறதே. இந்தப்பேச்சை இவ்வளவோடு நிறுத்தலாமே,

அண்ணு:— கடல் வண்ணு! ஆண்டாள் ☼எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம்" என்ருளே; இதை நீ நாடோறும் கேட்டுவருகிருயல்லவா? நீ பிறக்கிறபோதெல்லாம் நானும் பிறப்பேனென்றல்லவோ ஆண்டாள் சொல்லுவது. அவளுடைய திருத்தகப்பனார் ☼அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றியாயிரம் பல்லாண்டு☼ என்கிருர். ☼நன்ருக நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னையன்றியிலை☼ என்கிருர் திருமழிசைப்பிரான். பல சொல்லியென்? உன்னை விட்டு நான் பிரியேன், என்னை விட்டு நீ பிரியாய். இத்தகைய இருப்புக்குத்தான் மோக்ஷமென்றுபெயர். வேதபுருஷன் ஆருவது காண்டம் தொடங்கும்போதே "கோ ஹி தத் வேத, யத்யமுஷ்மிந் லோகே அஸ்தி வா ந வேதி" என்ருேதி யிருப்பது உனக்குத் தெரியாதா? 'மேலுலகத்தில் உண்டோ இல்லையோ. யார் கண்டார்' என்று பொய்யிலாத வேதமேயன்ருே சொல்லிவைத்தது. ☼வைகுந்தமாகும் தம் மூரெல்லாம்☼ என்று நம்மாழ்வார் ஸாதித்தபடியும், ☼ஸம்ஸார ஏஷ பகவந் அபவர்க்க ஏவ☼ என்று வேதாந்தவாசிரியர் பேசிவைத்தபடியும் இம்மண்ணுலகையே விண்ணுலகமாக நினைத்திருப்பவன் நான்; இதைப்பற்றி நான் பேசவேண்டியது அபரிமிதமாகவுண்டு கண்ணு! "இன்று ஓய்வு உண்டா?" என்று நீ கேட்டதன்மேல் வீணுன ப்ரஸங்கங்கள் வளர்ந்து விட்டன; இது கிடக்கட்டும். வந்த காரியத்தைச் சொல்லு கண்ணு!

கண்ணு:— வந்த காரியமென்னவென்கிருயே, இது அசட்டு வார்த்தையல்லவா? என்னிடம் சிற்றஞ்சிறுகாலை யெழுந்து வந்த கோபிகள் ☼யாம் வந்த காரியமாராய்ந்தருள்☼ என்ருர்களே, என்ன காரியமாக அவர்கள் வந்தார்கள்? உன்னோடு பேசுவதற்குமேல் ஒரு காரியமுண்டோ எனக்கு? இன்று எத்தனை நாழிகையவகாசம் எனக்குத் தருகிருய் அண்ணு? அதைச் சொல்லிவிடு முன்னம்.

அண்ணு:— என்னெஞ்சகங் சோரயில்கொண்ட கண்ணு; சற்றுமுன்னே என்னை நீ அசடென்ருய்; எனக்குமேற்பட்ட அசடாக இருக்கிருயே நீ; ☼உண்டோ கண்கள் துஞ்சுதலே☼ என்றிருக்கிற நான் உனக்கு என்ன விடை கூறுவது கண்ணு! நாளைக்கு நம்பிள்ளை யுத்ஸவம் ஆரம்பம், இந்த பதினெரு நாளும் நீ என்னோடு கூடவேயிருந்து போகலாகாதா? உன் கதைகளைப்பேசி நான் படுகிறபாடுகளை நீ கண்ணுல் பார்க்க வேண்டாமா?

கண்ணன்:— அப்படியே உன்னாசையை நான் தீர்க்கிறேன்; நாடோறும் இரண்டு வேளையும் திவ்யப்ரபந்த ஸேவையுண்டல்லவா? என்னைப்பற்றி இகழ்வாகப் பேசும் பாசுரம் ஸேவிக்கப்படுகிறவேளையில் நான் தலைகாட்ட வெட்கப்படுகிறேன். இகழ்வோ புகழ்வோ, என்பேச்சுவராத வேளைகளைச் சொல்லு; அந்த வேளைகளில் தவறாது கூடவேயிருக்கிறேன்.

அண்ணா:— என்னெண்ணத்துளென்றுமிருந்து தித்திக்குங் கண்ணா! இப்படியும் உனக்கொரு மருளிருக்குமா? உன்பேச்சு வாராத பாசுரம் ஸேவிக்கும் வேளை ஒன்றுகூட இருக்கமாட்டாதே. 'வேளைகள்' என்கிறாயே. ஒவ்வொரு வேளையும் உன் புகழ்வு சிறிதாயும் இகழ்வு பெரிதாயுந்தானிருக்கும். கீதையில் "ஜந்ம கர்ம ச மே திவ்யம்" என்றாய்; நான்பிறந்த வாறும் நான் வளர்ந்தவாறும் எனக்கு திவ்யம்—என்றன்றோ நீ சொல்லியிருப்பது. ஆழ்வாரும் ¤அதுவிதுவுது என்னலாவனவல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்¤ என்றார். கூரத்தாழ்வானும் ¤இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யம் அத்புதம் அதிப்ரியங்கரம்!¤ என்கிறார். உன்னைப் பற்றின புகழ்வைக் காட்டிலும் இகழ்வன்றோ பேரின்பவெள்ளமாயிருக்கின்றது. மாலை வேளைகளிலே நித்யாநுஸந்தானமென்று ஸேவிப்போம்; ¤மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்கு, கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி, நிச்சலும் தீமைகள் செய்வாய்!¤ என்று நீட்டி உன்னை உரக்க அழைப்போம். ¤கண்ணில் மணல்கொடு தூவிக் காலினால் பாய்ந்தனையென்று என்று எண்ணரும்பிள்ளைகள் வந்து முறைப்படுவதைப் பறைசாற்றுவோம்; திருமஞ்சனமென்று ஒன்று நடக்கும்; அப்போது ¤நாராயணபரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:, நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:¤என்றோதுவர் சிலர்; நானும் எந்தமரும் என்ன சொல்லுவோம் தெரியுமா? ¤கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டதையும்,¤ எண்ணெய்க் குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளி யெழுப்பிக் கண்ணைப் புரட்டிவிழித்ததையும் வானம் பிளக்கவோதுவோம்; அப்போது உன் திருமுகத்ததையும் உற்றுநோக்குவேன் நான்; அப்போது நீ எப்படியிருப்பாய் தெரியுமா கண்ணா!

கண்ணன்:— என்றுமென் புகழேத்து மண்ணா! அப்போது என்முகம் எப்படியிருக்கக் கண்டாய்? கொஞ்சம் சொல்லு கேட்போம்.

அண்ணா:— திண்ணார் வெண்சங்குடைய கண்ணா! உனக்கொன்று நினைவூட்டுகிறேன்; ¤ஆற்றிலிருந்து விளையாடுமாய்ச்சிகளை நீ சேற்றாலெறிந்தும், வளைதுகில் கைக்கொண்டும் காற்றில் கடியனாயோடி அகம்புக்கு மாற்றமும் தாராதிருந்தும் நீ செய்த தீம்புகளை மங்கை நல்லார்கள் தாம்வந்து அசோதைக்கு முறைப்பட்டபோது நீயிருந்த இருப்பைப் பெரியாழ்வார் கண்டு பேசியிருப்பதையறியாயோ? ¤அங்கமலக் கண்ணன் தன்னை யசோதைக்கு, மங்கை நல்லார்கள் தாம்வந்து முறைப்பட்ட¤ என்கிறார். ஆய்ச்சிகள் முறையிட முறையிட நீ அங்கமலக் கண்ணனாகவன்றோ இருந்தாய்; ஓரிடைச்சியின் வீட்டினுள்ளே நீ புக, அவள் ப்ரணயரோஷத்தாலே கதவடைத்துத் தள்ள, அப்போது நீயிருந்த இருப்பைத் திருமங்கை யாழ்வார் பேசுகிறார் கண்ணா! என்ன பேசுகிறார் தெரியுமோ? ¤அல்லிக் கமலக்கண்ணனை அங்கோராய்ச்சி, எல்லிப்பொழுதூடிய ஊடல் திறத்தை, கல்லின்மலிதோள் கலியன் சொன்ன மாலை, சொல்லித் துதிப்பாரவர் துக்கமிலரே" என்றார், அப்போது நீ அல்லிக் கமலக் கண்ணனாயிருந்தபடியைத் திருமங்கையாழ்வார் எப்படியோ கண்டுகொண்டாரப்பா!

கண்ணன்:— ¤சூட்டுநன் மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் என்னை நீராட்டித் தூபந்தராநிற்க, நான் அங்கிருந்து ஈட்டிய வெண்ணெய்தொடுவுண்ணவந்து கோவை வாயாள் பொருட்டு ஏற்றின்னெருத்தமிறுத்துத் திரும்பிச்சென்ற கதையை நம்மாழ்வார் ஸாக்ஷாத்

கரித்துச் சொன்னது ஆச்சரியமல்ல; ஓராய்ச்சி என்னைக் கதவடைத்துத் தள்ளினபோது நான் அல்லிக் கமலக்கண்ணனாயிருந்தேனென்பதை நேரே ஸாக்ஷாத்கரித்துப் பேசினாரே, இதுதான் எனக்கு மிகமிக ஆச்சரியமாகப்படுகிறது. உண்மையாகவே சொல்லுகிறேன்; பேய்ச்சி முலை சுவைத்தாய், கள்ளச்சாகடுதைத்தாய், மாமருதினூடுபோனாய், என்பவற்றைக் கேட்பதினும் ஒமச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்கதையும் கச்சொடுபட்டைக் கிழித்ததையும் எண்ணெய்க் குடத்தையுருட்டினதையும் இளம்பிள்ளையைக் கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்ததையும் பராசரபாராசர்யாதி மஹர்ஷிகள் காணாதவற்றையும் ஆழ்வார்கள் கண்டு, இதையெல்லாம் வெளியிட்டால் என்னுள்ளம் கன்றுமோவென்று சிறிதும் கூசாமல் பரமபோக்யமாகப் பாடிவைத்தார்களே, இதை நினைக்க நினைக்க நீராயுருகுமென்னாவி; கைம்மாறிலாத இந்த நன்றிக்காகவே வ்யாஸபராசர வால்மீகிகளைவிட்டு ஆழ்வார்களுக்கே திருக்கோலமமைத்து எனக்குப்போலே அவர்களுக்கும் உத்ஸவாதிகள் நடத்த நியமித்து வைத்தேனண்ணா! அந்த ரிஷிகள் எந்த கோவிலிலாவது தலைகாட்டுகிறார்களா பார்.

அண்ணா:— செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த என் கண்ணா! ஆழ்வார்கள் பாடினது பெரிதாகத் தோன்றவில்லையெனக்கு; அவற்றை உள்ளேயடக்கிவைக்காமல் உன்னெதிரே ஓதவேணுமென்று நியமமிட்டு, இவற்றின் ரஸப்ரவாஹங்களை வியாக்கியானாதி முகத்தால் வெளியிடவும் கட்டளையிட்டு, அரியன செய்த பகவத்ராமாநுஜரையன்றோ மிக மிகக் கொண்டாடவேணும். ❁ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம், திகந்த வ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ❁ என்று என்ஞான்றுமெங்கும் வாழ்த்தும் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை இதுவன்றோ,

கண்ணா:— என்பெருமை பேசகற்ற அண்ணா! இன்றைய நமது பேச்சு அமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே! என்னும்படியாகத்தானுள்ளது. இன்று ஒன்று கேட்கவேணுமென்றே வந்தேன். பிறகு மறந்துவிடுவேன், கேட்கிறேன், சிலநாட்களுக்கு முன்பு ஒரு பிரஸங்க மேடைக்குப் போயிருந்தேன்; பல்லாயிரவர் சூழ அங்கொரு பெரியவர் பேசுகிறார்; அவர் திருவாய்மொழியில் 'ஆய்ச்சியாகிய அன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள், சீற்றமுண்டழுகூத்தவப்பன் தன்னைக் குருகூர்ச்சடகோபன்" என்கிற பாசுரத்தைக்கொண்டு ஏதோ பேசுகிறார்; கேட்பவர்கள் யாவரும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார்கள்; எனக்கு அவர்களின் சிரிப்பு தெரிகிறதேயொழிய கதை இன்னதென்று தெரியவில்லை. ஈட்டில் நம்பிள்ளை ஸ்ரீஸூக்தியென்றுமட்டும் காதில் விழுந்தது. நாளைக்கு நம்பிள்ளை யுத்ஸவம் தொடக்கமென்றாயே, அந்த நம்பிள்ளை தான் போலும். அங்கு என்ன ஸ்ரீஸூக்தியுள்ளது? ஸ்ரீகோசம் காணவேண்டாவே உனக்கு; கண்டஸ்தமாயிருக்குமே. கொஞ்சம் விவரித்துச் சொல்வையா?

அண்ணா:— என்னை மையலேற்றி மயக்கும் மாயக்கண்ணா! அதுவா? உன்சரிதை தவிர வேறு என்ன இருக்கிறது! நம்பிள்ளை சாஸ்த்ரார்த்தங்களை விவரிப்பதில் சிங்கம்; உன் சிறுச்சேவகங்களைப்பற்றிப் பேசத் தொடங்கிவிட்டாலோ இஃது ஒன்றேதான் இவர் கற்ற கல்வியோ! என்னும்படியாயிருக்கும்; அந்த கதையைக்கேள். அங்கு ஆழ்வாருடைய பாசுரம் எப்படி அவதரித்துள்ளதென்றால், ❁வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டழு கூத்தன்❁ என்றுள்ளது. "வெண்ணெய் களவு செய்ததற்காக ஆப்புண்டழுதான்" என்றாதே வெண்ணெய் வார்த்தையுள் அழுதான் என்றதற்கு மருமமறிந்து பொருள்சொல்ல வேணுமல்லவா? நம்பிள்ளை சொன்னபொருள்; (ஈட்டுப் பங்க்திகள் கேளப்பா;) ஊரிலே வெண்ணெய் களவுபோயிற்று என்றார்கள், அவ்வளவிலே நாமிறே இதுக்கிலக்கு என்று கண்ணன்

அழப்புக்கான். மடம்மெழுகுவாரார்? என்ன, அச்ரோத்ரியன் என்றார்கள். இப்பரப்பெல்லாம் என்னாலே மெழுகப்போமோ என்றான். அதுபோலே.''

கண்ணு:— என்னுள்ளங்குளிரப்பேசுமண்ணு! ஊரில் வெண்ணெய் களவு ப்ரஸங்கம் வந்தவாறே நான் அழுதது நினைவிருக்கிறது. அதுஸரி, மடம்மெழுகுவாரார்? என்று தொடங்கி ஏதோ கதை காண்கிறதே, அது என்னவென்று புரியவில்லை, அதை விளக்கியுரை.

அண்ணு:— அதுவா? சிரிப்பையடக்கிச் சொல்லுகிறேன்கேள். ஒரு பெரிய தரும ஸத்திரம், அதன் அகலமும் நீளமும் அபாரம். அங்குச் சிலர் தங்க வந்தார்கள். படுத்துக் கொண்டு பேசுகிறார்கள். அவர்களில் ஒருவர் இவ்வளவு விஸ்தாரமாக தர்மசாலையைக் கட்டி விட்டார்களே, இதைப் பெருக்கி மெழுகுவார் ஆர்? என்றானும் ஒருவன். வந்து சற்று தங்கிப் போகிறவர்களுக்கு இந்த விசாரம் ஏதுக்கு? என்று நினைத்த வொருவன் 'எவனோ ஒரு விதவா புத்ரன் பெருக்கி மெழுகிப் போகிறான், உனக்கென்னடா விசாரம்?' என்றானும். அந்தத் திரளில் மெய்யாகவே ஒரு விதவாபுத்திரன் இருந்ததனால் அவன் எழுந்து இத்தனைபெரிய சத்திரத்தை என்னால் மெழுக முடியுமோ? என்றழுதானும். அவனை விதவாபுத்திரனென்று யாரும் சொல்லவில்லை, அவன்தான் சத்திரத்தை மெழுகுபவன் என்றும் யாரும் சொல்லவில்லை. தன் அவத்யத்தைத் தானே வெளியிட்டுக் கொண்டானாயிற்று. அதுபோல கண்ணு! நீதான் வெண்ணெய் களவு செய்தாயென்று யாரும் சொல்லாதிருக்க வெண்ணெய் பேச்சு வந்தவாறே விக்கி விக்கியழுதாயல்லவா? அதற்கு இது பொருத்தமான நிதர்சனந்தானே.

கண்ணு:— இப்படி என் கதைகளை யெழுதிவைப்பதும் அதை நூற்றுவர்கூடி ராகம் போட்டு நீட்டிப் பாடுவதும், அதற்கு வியாக்கியானங்களெழுதிவைப்பதும், பகவத்விஷய காலக்ஷேபமென்றுசொல்லி அதுகொண்டு போது போக்குவதும் என்னுடைய பாக்கியந்தான், நானே ராமாவதாரமெடுத்தேனே, அவ்வவதாரத்தையும் ஆழ்வார்கள் அநுபவிக்கிறார்களே, அதில் இப்படி ஏதேனும் விஷயமுண்டோ அண்ணு!

அண்ணு:— கொடிய கடிய திருமாலென்னுங்கண்ணு! சீற்றமுண்டழுகூத்தவப்பன் என்றார்கள் உன்னைப்பற்றி, ☼சீற்றமிலாதானைப் பாடிப்பற சீதைமணாளனைப் பாடிப்பற☼ என்றார்கள்; அவனைப்பற்றி. உன்னுடைய தேவியார் உன்னை☼தருமமறியாக் குறும்பனென்றாள்; அவனுடைய தேவியார் அவனை ☼விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ:☼ என்றாள். உன்னுடைய தேவியார் உன்னை ☼வெற்றவெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே☼ என்றாள். அவனுடைய தேவியார் ☼கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ☼ என்றாள்.

கண்ணு — இப்படியே எட்டுநாள் பத்துநாள் அடுக்கிக்கொண்டே போவாயோ? நான் இவ்வளவு குணஹீனனென்று தெரிந்திருந்தும் அந்த ஆண்டாள் ☼ஆய்ப்பாடிக்கே என்னையுய்த்திடுமின்☼ நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்☼ ☼எமுனைக் கரைக்கென்னையுய்த்திடுமின்☼ என்றெல்லாம் ஏதுக்குச் சொல்லவேண்டும்? ☼அயோத்தி நகர்க்கென்னையுய்த்திடுமின்☼ ☼தயரதன் தன்மனைக்கே என்னையுய்த்திடுமின்☼ சரயுவின் கரைக்கே என்னைச் சேர்த்திடுமின்☼ என்றிங்ஙனே அலற்றினார் யாரேனுமுண்டோ? சொல் அண்ணு!

அண்ணு:— காணுயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற கண்ணு! விநோதவார்த்தை வினையாய் முடியுமோவென்றஞ்சுகிறேன். உனக்குச் சீற்றமுண்டாய்விட்டாப்போலிருக்கிறதே. வாதப்ரதி வாத தோரணையில்சென்றுவிட்டாப் போலிருக்கிறதே! 'ராமன் கதையில் இப்படி யேதேனுமுண்டோ?' என்று நீயாகவே கேட்டபடியாலே எனக்குத் தெரிந்ததைச் சொல்லி வருகிறேன். சீற்றங்கொள்ளாதேகண்ணு! என் குட்டனே முத்தம் தா,

கண்ணு:— எனக்குச் சீற்றமுண்டாயிற்றென்று எதுகொண்டறிந்தாய் அண்ணு! "நானே ராமாவதாரமெடுத்தேனே" என்றன்றோ நான் சொல்லியிருப்பது. நான்வேறு, அவன் வேறு என்கிற எண்ணம் என் நெஞ்சில் ஒருமூலையிலாவது இருந்தாலன்றோ எனக்குச் சீற்றம் வரும். அப்படிப்பட்ட எண்ணம் கோபிகளுக்கும் கிடையாது, ஆண்டாளுக்கும் கிடையாது இதை உனக்கு நன்ருக மூதலிக்கிறேன் கேள் அண்ணு!

அண்ணு:— இவ்விஷயத்தை நீ என்னுடைய திவ்யார்த்த தீபிகையுரையிலிருந்தே க்ரஹித்திருக்கவேணும்; அதனுல் பாதகமென்ன? நீ க்ரஹித்திருப்பதை உன்வாயினுல் நீயே சொல்லக் கேட்பது விசேஷந்தானே; சொல்லு கேட்கிறேன்.

கண்ணு:— நான் திருவாய்ப்பாடியில் பட்டிமேய்ந்து விளையாடுகிற காலத்தில் ஆயர் சிறுமிகள் சிற்றிலிழைத்து விளையாடுகையில் நான் சென்று அதைச்சிதைத்திடுவேன்; அப்போது அச்சிறுமிகள் "நாங்கள் சிரமப்பட்டு இழைக்குஞ் சிற்றிலை அழிக்காதே கண்ணு!" என்று பிரார்த்திக்கையில் "கடலையடைத்து அரக்கர் குலங்களை முற்றவுஞ்செற்று இலங்கையைப் பூசலாக்கிய சேவகா! எம்மைவாதியேல்" என்றும், "சேதுபந்தம் திருத்திஞய்! எங்கள் சிற்றில் வந்து சிதையேலே" என்றுஞ்சொல்லி என்னை இராமனுகவே வெளியிட்டுவிடுவார்கள் கோபிகள் வார்த்தையானவிது கிடக்கட்டும். பதிகத்தின் நிகமனப்பாசுரம் ஆண்டாளுடைய தேயன்ருே. அதில், நிகழ்ந்த செய்தியைச் சொல்லும்போது "சீதைவாயமுதமுண்டாய்! எங்கள் சிற்றில் நீ சிதையேலென்று, வீதிவாய் விளையாடும் ஆயர் சிறுமியர் மழலைச்சொல்லை" என்று இடைப்பெண்கள் சீதைவாயமுதமுண்ட ஸீதாபதியை நோக்கியே வேண்டிக்கொண்டதாகச் சொல்லி முடித்திட்டாள்.

அண்ணு:— செய்யதாமரைக்கண்ண கண்ணு! சீதைவாயமுதமுண்டாயென்ற விடத்து சீதையென்றது ஜானகியையன்று; சீதையென்று ஒரு கோபிக்குப் பெயர்; அவளுடைய வாயமுதமுண்டவனே! என்று உன்னையே விளித்துக்கூறினதாகக் கொண்டாலோ?

கண்ணு:— உனது தீபிகையுரையில் இப்படித்தானெழுதி யிருக்கிருயோ? ☼இலங்கையைப் பூசலாக்கிய சேவகா!☼ என்றவிடத்திலும் 'இலங்கை என்று ஒரு கோபி; அவளைப் பூசலாக்கினேன்' என்பாய்போலும்; நான் தத்வார்த்தமெடுத்துரைக்கும்போது இந்த விரோதோக்திகள் ரஸ்யமல்ல. மேலுங்கேள் கோபிகள் கோழியழைப்பதன் முன்னம் குடைந்து நீராடும்போது பின்னே சென்ருெளித்திருந்து அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு நான் மரமேறி யிருந்தகாலத்தில் துகிலைப் பணித்தருளாயேயென்று இரக்கின்ற ஆய்ச்சிகள் வில்லாலிலங்கையழித்தாய்! நீ வேண்டியதெல்லாம் தருவோம்☼ என்றும் ☼இரக்கமேலொன்றுமிலதாய்! இலங்கையழித்தபிரானே☼ என்றும் என்னை இராமனுகவே காட்டியிருக்கிறுர்கள்.

அண்ணு:— கோமளவாயர் கொழுந்தான கண்ணு! அப்படியாகில் திருப்பாவையில் ஒருபாட்டில் ☼சினத்திஞல் தென்னிலங்கைக் கோமானைச்செற்ற *மனத்துக்கினியானை*☼ என்றதற்காக ஆய்ச்சிகளுக்குள் பெருங்குழப்பம் ஏற்பட்டதே, அது எதனுல்? நீ தான் ராமன், ராமன்தான் நீ—என்கிற தத்துவம் கோபிகளுக்குத் தெரிந்திருக்கச்செய்தே "இராமனை மனத்துக்கினியானென்று சொல்லி விட்டார்களந்தோ" என்று கலஹம் விளைந்த காரணத்தைச் சொல்லு பார்ப்போம்.

கண்ணு:— அத்தத் திருப்பாவையில் அடுத்த பாசுரத்தில் "புள்ளின்வாய் கீண்டானை—பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்று ஒற்றுமையைக்காட்டியிருக்கிருர்களல்லவா? தெளியச்செய்வதற்காகக் கலக்குவதென்று உண்டல்லவா? அந்தவகையில் அமைந்தது அந்த கலஹம். பட்டர் அழகியமணவாளா என்னும் போதும், அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானே என்னும் போதும் பரஸ்பரம் ஸ்பர்த்தை விளைந்ததாகச் சொல்லுவதை நீ கேட்டிருக்கிருயன்ருே. அதுபோலவென்றுகொள். (தொடரும்)

# காஞ்சீபுரத்தில் வித்வத் ஸதஸ்ஸு

கோடிகந்யகாதானம் ஸ்ரீதாததேசிகன் என்று ப்ரஸித்தரான மஹாபுருஷருடைய அவதாரம் கார்த்திகைமீ அநுஷநக்ஷத்ரத்திலென்பது ப்ரஸித்தம். இவ்வருஷம் நானூறுண்டு நிறைவு என்பதுபற்றி அந்த மஹாபுருஷருடைய திருநக்ஷத்ரோத்ஸவம் மிகச்சிறப்பாக அவருடைய திருவம்சஸ்தர்களால் நடத்திவைக்கப்பட்டது. பலவகைச் சிறப்புகளில் மேன்மையாகக் கொண்டாடத்தக்க சிறப்பு வித்வத் ஸதஸ்ஸின் நிகழ்ச்சியாகும். விசாகம் அநுஷம் கேட்டை மூலம் ஆகிய நான்கு நாட்களில் தேவப்பெருமாள் ஸன்னிதி நூற்றுக்கால் மண்டபத்தில் ஸதஸ் நடந்தது. பரிகணிதர்களான பல வித்வான்கள் இதம்பரமாக வந்திருந்தார்கள்; நமக்குத் தெரிந்து நாற்பது வித்வான்கள் கூடியிருந்தார்கள். ஸ்ரீரங்கத்திலிருந்தும் பல பெரியார்கள் விஜயம் செய்திருந்தார்கள். அவர்களில் ஸ்ரீமதுபயவே, வித்வான் மதுராந்தகம் ஈச்சம்பாடி வீரராகவாசாரியர் ஸ்வாமி பூர்த்தியாக எழுந்தருளியிருந்தது குறிப்பிடத்தக்கது.

20—11—71 சனிக்கிழமையிரவு ஸதஸ்ஸு முடிவுபெற்ற பிறகு ஷை மதுராந்தகம் ஸ்வாமி அடியேனுடன் பரமப்ரீதியாக வார்த்தையாடிக்கொண்டேவந்து தம்முடைய க்ருதியொன்றை அடியேனிடம் கொடுத்து "இதைக் கடாக்ஷித்தருளவேணும், கண்டனப்ரவ்ருத்தி மட்டும் வேண்டாமென்று ஸஹஜஸௌஹார்தத்தினால் ப்ரார்த்திக்கிறேன்" என்று ஸாதித்தார். அப்போது இரவு ஒரு மணி; பகவத்ஸங்கல்பப்படியாகிறதென்று விஜ்ஞாபித்துக்கொண்டு விடைகொண்டேன்.

## நிகஷ சததூஷணீ நிரீக்ஷணம்

மதுராந்தகம் ஸ்வாமி க்ருதியின் பெயர் *நிகஷசததூஷணீ* என்பதாம். இது எப்போது அச்சிடப்பட்டதென்று தெரியவில்லை. டைடலில் 1971 என்றிவ்வளவே உள்ளது. நூலின் உள்ளே பக்கம் 6ல் 21—7—71 என்றிருப்பது கண்டேன். ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ரிகையில் சில மாதங்களுக்குமுன்பு ☼அஸாரமல்பஸாரஞ்ச☼ என்கிற சுலோகத்தின் பொருள் விளக்கத்தைப்பற்றிப் பிரபலமாக நடத்துவந்த சர்ச்சைக்கு ஸம்பந்தப்பட்ட க்ருதியென்று உணர்ந்தேன். நூலின் முகப்பில் (கொட்டையெழுத்தில்) "நடைபெறப்போகும் விவாத ஸபையைப் பற்றிய அறிவிப்பு" என்றிருப்பதுகண்டேன். அந்த விவாத ஸபையில் எவ்விதமாகவும் ஸம்பந்தப்பட அடியேன் விரும்பவில்லையென்று ஏற்கனவே வெளியிட்டிருப்பதனால் இப்புத்தகத்தை வாசித்துப்பார்க்க அடியேனுக்கு ருசியுண்டாகவில்லை. மேலும், ஆறுமாதகாலமாக அடியேனுக்கு நேத்ரபாடவம் மிகவும் குன்றியிருப்பதைப் பலகால் தெரிவித்திருக்கிறேன்; இவ்விதழிலும் தெரிவித்திருக்கிறேன். எழுத முடியுமே யொழிய வாசிக்க முடியாது என்னும் நிலைமையிலிருந்து வருகிறேன். அதனாலும் அந்நூலை வாசிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

ஆயினும் அந்நூலைச் சில சிலவிடங்களில் வாசித்துப்பார்த்தவரும் அடியேனுக்கு ஸுஹ்ருந்மணியுமான நாவல்பாக்கம் ஸ்வாமியொருவர் (வித்வான்) அதில் சிலசிலவிடங்களை வாசித்துக் காட்டினார். அதன்மேல் மதுராந்தகம் ஸ்வாமிக்கே ஒரு விண்ணப்பமெழுதினேன். அதை போஸ்டு செய்ய நினைக்கையில், இவ்விஷயம் ஸஹ்ருதயர்களெல்லார்க்கும் தெரிந்தால் நல்லதல்லவா? என்று தோன்றி அதனை இதோ அச்சிட்டு வெளியிடுகிறேன். தபால் மூலம் அனுப்புவதென்கிற எண்ணத்தினால் அந்த ஸ்வாமியை நோக்கியே (மத்யமபுருஷனாகவே, முன்னிலையாகவே) எழுதி முடித்திருந்த விஜ்ஞாபன பத்திரிகையாதலால் அதை (ப்ரதமபுருஷனாக-படர்க்கையாக) மாற்றாமல் அப்படியே வெளியிடுகிறேன்.

## ஸ்ரீ மதுராந்தகஸ்வாமிக்கு அடியேனுடைய விண்ணப்பம்.

ஸ்ரீமத் வேத மார்க்கேத்யாதி........ஸ்வாமிஸன்னிதியில் தெண்டன் ஸமர்ப்பித்துச் செய்யும் விண்ணப்பம். நித்யஸ்ரீ: ஏதோவொரு வ்யாஜத்தினால் இங்கு மூன்று நான்கு நாள் தேவரீரோடு கலந்து பழக பாக்கியம் வாய்த்தவிது பரமலாபம். நேற்று சனிக்கிழமையன்றிரவு எட்டரைமணியிலிருந்து பன்னிரண்டு மணிவரையிலும் இவ்விடம் நூற்றுக்கால் மண்டபத்து வித்வத் ஸதஸ்ஸில் அடியேனுடைய இரண்டு உபந்யாஸங்களையும் திருச்செவி சாத்தியருள ஸ்ரீமத் அக்நிஹோத்ரம் ஸ்வாமியோடு கூட தேவரீர் எழுந்தருளியிருந்தது மஹாபாக்யம். ஓரிருவர் வானோமறிகடலோமாருதமோ தீயகமோ கானோவென்கிற நம்மாழ்வார் பாசுரத்தை நினைவூட்டினது போலல்லாமல் தேவரீர்கூடியிருந்து அடியேனை க்ருதார்த்தனாக்கினதற்குத் தலையல்லால் கைம்மாறிலேன். உண்மையில் தேவரீரைப் போன்ற ஸஹ்ருதயரஸிக ஸார்வபௌமர் ம்ருக்யர்களேயாவர். ஸதஸ்ஸு முடிந்த பிறகும் கார் (Car) வரைக்கும் அடியேனுடன் எழுந்தருளி க்ருபையுடன் ஸாதித்த நிகஷசததூஷணியைப் பூர்த்தியாக வாசிக்கவேணுமென்று ஸ்வாமி நியமித்தருளியிருந்தும் நேத்ரபாடவக் குறைவினால் வாசிக்கப் பெற்றிலேன். சிலவிடங்களை ஒரு ஸுஹ்ருந்மணி வாசித்துக் காட்டினபடியால் அவ்விடங்களில் தோன்றினவற்றைமட்டும் விஜ்ஞாபிக்கிறேன். ப்ரக்ருதவிவாத விஷயம் அடியேனுக்கு ஆதியிலிருந்தே தெரியாமையால் அதில் அடியேன் ஈஷத்தும் புகாமல், சததூஷணியென்னும் நூற்பெயருக்குச்சேர இட்டருளின நூறு லக்கங்களுக்கு மேற்பட தேவரீர் எழுதியுள்ளவற்றில் ஒன்றிரண்டு விஷயங்களைப்பற்றிமட்டும் விஜ்ஞாபிக்கிறேன். பலவற்றையும் பிசிறிப் பலாப்பிசினாக்காதே சிறிது சிறிதாக விஜ்ஞாபித்து விடைபெற்று மகிழ்வோம் என்றெண்ணியே இங்ஙனம் செய்கிறேன், ஜிகீஷயா அன்றிக்கே ஜிஜ்ஞாஸயைவ விஜ்ஞாபயே. இந்த ஸ்வல்ப விஷயங்களுக்கு ஆர்ஜவத்தோடு விடைதந்தருளிவிட்டால் இந்த சததூஷணி முழுவதும் அபேத்யம் அப்ரத்ருஷ்யம் அவிசால்யம் என்று அடியேனே பறைசாற்றுவேன் ப்ரபஞ்சம் முழுவதும்.

## மதிராபிந்துமிச்ர விஷயம்

101 என்று லக்கமிட்டுத் தொடங்குகையில்—"மதிராபிந்துமிச்ரமான சாதகும்பமய கும்ப கத தீர்த்தஸலிலம் போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம் என்று பிள்ளான் அருளினார்" என்றுள்ளது. மேலே ஸ்ரீ அளவந்தாரென்று தொடங்கி ஒரு இருபத்தைந்து வரிகள் செல்லுகின்றன. இவையெல்லாம் ஸ்வகீய ஸித்தாந்த அநுவாதமா? பரபக்ஷ பரிஹாஸமா? என்று ஆராய்ந்தேன், விளங்கவில்லை. ஸ்ரீராமாநுஜன் 276ல் ஸுதர்சன ஸந்தர்சனமென்று அடியேன் வெளியிட்டிருக்கின்ற (மூன்று பரிச்சேதங்களையுடைய) விரிவான கட்டுரையை தேவரீர் கடாக்ஷித்தருளியிருக்கிறதன்றோ. அதில் பக்கம் 21ல் "இந்நூலுக்கு இதுதான் உயிர் நிலை" என்று மகுடமிட்டு, இப்போது தேவரீர் எடுத்துக்காட்டியுள்ள பிள்ளான்வார்த்தையைப் பற்றி மிகவிரிவாக ப்ரஸங்கித்திருக்கிறேனல்லவா? அதைச் சிறிது நினைவூட்டுகிறேன். இந்த பிள்ளான் வார்த்தையை தேசிகன் தமது ரஹஸ்யத்ரய ஸாரத்தில் கண்டித்திருக்கிறாரென்பது நிர்விவாதம். ‚மதிரா பிந்துமிச்ரமான" இத்யாதியான ஸ்ரீஸூக்தியானது ஸ்ரீவசன பூஷணத்தில் உபாத்தம். அதில் "திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிக்கும்படி" என்று முந்துற முன்னம் ஸ்பஷ்டமாகவுள்ளது. அதை தேசிகன் கண்ணுற்றேயிருப்பர். கண்ணுற்றாரென்று கொள்ளில் பிள்ளானை புத்தி பூர்வகமாகவே கண்டிக்கிறாரென்பது நன்கு விளங்கும். கண்ணுற்றாரல்லர் என்னில்; இதைப் பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியாகவே ப்ரமித்துக் கண்டித்தாரென்று தேறும். அங்கு தமிழ்ப் பங்க்தியாக ஒன்றுமெழுதாமல் "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்த த்ருஷ்டாந்தவர்ணநம், அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்" என்றொரு காரிகையிட்டுத் தனக்காக தூஷித்திருக்கிறார். தனக்காகவென்றது-சாதுர்யமாக வென்றபடி.

மதுராந்தக ஸ்வாமிந் ஸ்ரீராமாநுஜன் 276ல் அடியேன் இதுபற்றி மிகவிரிவாக எழுதியிருப்பவற்றை இங்கு அநுவதிக்க வேண்டுமோ? வேண்டா. மதிராபிந்து மிச்ரமான இத்யாதி ஸ்ரீஸூக்திஸித்தமான அர்த்தம் தேசிகனுக்கு அநபிமதமென்பது நிர்விவாதம். இவ்வர்த்தம் பிள்ளான் பணித்ததென்பது க்ரந்தாரூடமாய்விட்டது. தேசிகனுக்குப் பிள்ளானிடத்தில் கௌரவ புத்தி இருந்திருக்குமாகில் கண்டனமான காரிகையிடாமல் "இப்படி பிள்ளான் ஒருகாலும் ஸாதித்திருக்கமாட்டார்" என்றெழுதியிருக்கவேணும் அல்லது அவருக்கு இன்னது அபிப்ராயம் என்றுவது தாத்பரியம்காட்டியிருக்கவேணும். இரண்டுமில்லை கண்டனமே ஸ்பஷ்டமாகவுள்ளது. அர்வாசீனர்களாவது *இது பிள்ளான் ஸ்ரீஸூக்தியன்று* என்றெழுதியிருக்கவேணும் அல்லது கண்டனமன்று என்றுவது மழுப்பியிருக்கவேணும. ப்ராமாணிக பண்டி தோத்தமரான ஸ்ரீமத் பரமஹம்ஸ...... இஞ்சிமேட்டழகிய சிங்கர் தம்முடைய ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானத்திலே, இது பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியே யென்பதையும், இட்டிருக்கிற காரிகை கண்டனந்தானென்பதையும் விளக்கமாகக் காட்டியுள்ளார். இதை மீண்டும் இங்குக் காட்டுகின்றேன், இஞ்சிமேட்டு ஸ்வாமியின் இவ்விடத்து வியாக்கியானத்தில்,

> "சிலர் ☆மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமயகும்பகத தீர்த்த ஸலிலம் போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்☆ என்கிற பிள்ளான் வாக்யத்தைக்கொண்டு பக்தி அஹங்கார கர்ப்பமாகையால் ஸ்வரூப விருத்தமென்பர்கள், அது அநுபபந்நம்"

என்று ஸாதித்திருக்கிறார். அநுபபத்தியை விளக்கவில்லை, "ப்ரபத்தாவபி பக்திவத்" என்கிற மூலத்தை மட்டுமே தமிழாக்கம் செய்திருக்கிறார்.

பிள்ளான் (மதிராமிச்ரமான) என்று ஸாதித்திருக்கவில்லை, (மதிரா பிந்து மிச்ரமான) என்று ஸாதித்திருக்கிறார்; தீர்த்த ஸலிலத்தை வெறும் பாத்ரஸ்தமாகப் பிள்ளான் ஸாதிக்கவில்லை, (சாதகும்பமயகும்பகத) என்று ஸௌவர்ணபாத்ரஸ்தமென்று ஸாதித்திருக்கிறார். இதற்குச்சேர தேசிகன் எவ்விதமாகக் காரிகையிட்டிருக்கவேணுமென்றால் "ஸமத்யபிந்து ஸௌவர்ண பாத்ர தீர்த்த நிதர்சனம்" என்று இட்டிருக்கவேணும். (மதிராமிச்ரமான) என்னுதே (மதிரா பிந்து மிச்ரமான) என்று ஸாதித்திருக்கையாலே உபாஸகன் ஸாத்விகத்யாகம் பண்ணினாலுங் கூட அஹங்கார லேசமாவது புகுந்தே தீருமென்று காட்டினபடி. அதற்காகவே பிந்து சப்தமிட்டருளினர் திருக்குருகைப்பிரான்பிள்ளான். "அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்" என்கிற ஆபாதனம் யுக்தமாகுமா? என்பதை மதுராந்தகம் ஸ்வாமிந்! தேவரீரே விமர்சித்தருளவேணும்.

## பிள்ளான் வார்த்தையை தூஷித்தது பிசகு

"தேவதாந்தரங்கள் ரஜஸ்தமோ குணமிச்ரங்களாகையாலே நமக்கு அநுபாஸ்யங்கள்" என்று ஒருவர் சொன்னால் "ஸ்ரீமந்நாராயணனும் ரஜஸ்தமோ மிச்ரனானால் அநுபாஸ்யனே' என்று ப்ரதிபந்தி கொடுப்பாருண்டோ? "பரமஸத்வஸமாச்ரயன் நாராயணன்" என்பதறியாதாருடைய சோத்யமன்றோ அது. அன்றியும் ந்யாஸ திலகத்தில் "ஆர்த்தேஷ்வாசுபலா" என்கிற சுலோகத்தில் ஸ்வாமி தேசிகனே ப்ரபத்திக்கு ஐந்து (அல்லது) ஆறுவிசேஷணங்கள் இட்டருளியிருக்கிறார். ஒவ்வொரு விசேஷணமும் பரிகராலங்காரத்தின்படியே அமைந்துள்ளது. "யாவதாத்மநியத த்வத் பாரதந்த்ர்யோசிதா" என்கிற நான்காவது விசேஷணத்தை உற்றுநோக்கினால் "ப்ரபத்தி ஸ்வரூபோசிதம்; பக்தியானது தத் ப்ரத்யநீகமாய் ஸ்வரூப விருத்தமானது" என்னுமிடம் கையிலங்கு நெல்லிக்கனியாகவில்லையா? அந்த ச்லோகத்திலுள்ள ஒவ்வொரு விசேஷணமும் ப்ரபத்தியின் உத்கர்ஷத்தையும் பக்தியின் அபகர்ஷத்தையும் விளக்குவதற்கென்றே இடப்பட்டதென்பதை ஸ்வாமிந்! தேவரீர்கூட க்ராஹித்தருளவில்லையா?

ஸஹ்ருதயரஸிக ஸார்வபௌம மதுராந்தக மஹாஸ்வாமிந்! இப்போது அடியேன் தேவரீரிடம் அறிந்துகொள்ள விரும்புவது இவ்வளவே; (மதிராபிந்து) இத்யாதியான ஸ்ரீஸூக்தி திருக்குருகைப்பிரான் பிள்ளானுடையது தானே; அது அநுபபந்நம் என்று கிரஸிக்கப்பட்டதும் வாஸ்தவந்தானே? சுருக்கமாக விடையிறுத்தருளவேணும். "இதி மந்தைரிதம் ப்ரோக்தம்–க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம்–த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:" இத்யாதி ஸம்பாவனை ஸூக்திகள் பொழியாதே ஸரளமாக விட்டிருக்கையாலே பிள்ளான்தான் இலக்காயிருக்கவேணுமென்கிறார்கள் தேவரீர் வகுப்பினர். தேவரீர் திருவுள்ளமே அடியேனுக்குத் தஞ்சமாகும்.

## இயம் கேவலச்லோக விசாரம்

இனி அடுத்த விஷயம் ஒன்று. தேவரீருடைய சதநூஷணியில் 103 என்று லக்கமிட்டெழுதுகையில் "இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணும்" என்கிற ந்யாயஸித்தாஞ்ஜந காரிகையில் பூர்வார்த்தத்தில் (கேவலலக்ஷ்மீசோபாயத்வ) என்பதனால் லக்ஷ்மீசனுக்குமட்டும் உபாயத்வம் தேறுமேயொழிய லக்ஷ்மிக்கு அது இல்லையென்பது விளக்கப்பட்டதென்கிற வாதத்தை மறுக்க முயன்ற தேவரீர் "லக்ஷ்மீச் ச ஈசச் ச—தயோ:" என்று விவக்ஷிதமாகையாலே லக்ஷ்மிக்கும் உபாயத்வம் ஸித்திக்கக் குறையில்லையென்று ஸாதித்திருக்கிறது. ஸ்வாமிந்! இது வித்வான்களின் வார்த்தையாகுமா? இப்படி விவக்ஷிதமாகில் லக்ஷ்மீததீசோபாயத்வ...... என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும் (கேவல) என்றதையும் நோக்கவேணும். (ஈச) என்கிற தனிச் சொல்லானது "சம்புரீச: பசுபதி: சிவச் சூலீ மஹேச்வர:" என்ற அமரகோசத்தின்படி சிவனைத்தான் சொல்லும். ஆழ்வானுடைய ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் ☆அந்யத்ர து க்வசந கேசித் இஹேச சப்தாத்☆ இத்யாதியாகவுள்ள ச்லோகம் இவ்விடத்திற்கு உபசாரகமாகாது. (பம்பாதீரே) ஸீதாபதிஸேவநே ந ஹநுமாந் ஹ்ருஷ்ட:" என்றால் ஸிதா ச பதிச் ச தயோஸ் ஸேவநே" என்று பொருள்பணிப்பாருண்டோ? (நந்த நந்தந பத்நீ) என்றால் நந்தகோபனுக்கும் அவன் மகனுக்கும் மனைவியென்று பொருள் கூறுவாருளரோ? யோக்யதை யில்லாமையால் தவிருகிறது என்னில்; ஸூஷ்டு உக்த மிதி ஸந்துஷ்யாம; ஸ்வாமி தேசிகன் ரஹஸ்ய ரத்நாவளியிலும் அதன் ஹ்ருதயத்திலும் சதுச் ச்லோகீபாஷ்யத்திலும் மற்றும் பலவிடங்களிலும் தமிழிலும் வடமொழியிலும் கத்யமாகவும் பத்யமாகவும் ஸாதித்திருப்பவைகளைக் கொள்ளை கொள்ளையாகக் காட்டியிருக்கிறேனே, அவற்றுக்கெல்லாம் மறுமாற்றமுண்டோ? பிராட்டிக்குப் புருஷகாரத்ருத்யமும் எம்பெருமானுக்கு முக்தி ப்ரதத்வமும் வ்யவஸ்திதமென்று செப்பேடும் கல்வெட்டுமாகப் பொறித்து வைத்திருப்பவர் தேசிகனைப்போல் வேறொருவருளரோ?

## த்ராணேஸ்வாமித்வ மௌசித்ய மென்கிற ப்ரஹ்மாஸ்த்ரம்

முக்கியமாக ☆இயம் கேவ லேத்யாதி ச்லோகமானது ப்ரபத்தியின் அஹேதுத்வத்தை ஸ்தாபிக்க அவதரித்த ச்லோகம். அதைப்பற்றி தேவரீர் வாய்திறக்க ஏதேனும் வழியுளதோ?☆ த்ராணே ஸ்வாமித்வமௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ:" என்கிற ரஹஸ்யத்ரயஸாரகாரிகையாகிற கோடிஸூர்ய ப்ரபையின் "முன்னே பகல் விளக்கும் மின்மினியுமாகக் கூட நிற்கவல்லதொரு ப்ரமாணமில்லையே; காணுமாறினி உண்டெனிலருளே" என்ற தேவகியைப்போலே பிரார்த்திக்குமடியேனுக்கு அருள் செய்தருளவேணும் ஸ்வாமிந்! ☆த்ராணே ஸ்வாமித்வ மௌசித்யம்☆ என்றவுடனே ☆ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:☆ என்றருளியதையும், ☆இயம் கேவலகாரிகையில்☆ கிம் புநஸ் ஸஹகாரிணும் என்றருளியதையும் சேரக் கடாக்ஷித்து மருளொழிந்து மருளொழிக்க வேணும் ஸ்வாமிந்! இது மிகமுக்கியமான வேண்டுகோள்.

ஸ்வாமின்! தொடர்ந்து பலபல விஷயங்கள் வினவத்தோன்றினாலும் இவ்வளவுக்கு விடைகிடைத்தபின் அடைவே விஜ்ஞாபிப்பேன். அஸாரால்பஸார விவேசனத்தில் அடியேன் அணுவளவும் இறங்கவில்லையென்பதை மீண்டும் விஜ்ஞாபிக்கிறேன். தேவரீருடைய சததூஷணியைப் பிறர்வாசித்துக்காட்டியே அறியவேண்டியிருப்பதால் இன்னமும் கேட்க நேருங்கால் அஸதர்த்தங்கள் செவிப்பட்டால் ஜிஜ்ஞாஸையை வெளியிடாமலிருக்க கில்லேன்.

தூஷணியில் "துர்விஜ்ஞேயஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்" என்று முடித் திருக்கிறது. பாதுகாஸஹஸ்ரத்தில் ஸுபாஷித பத்ததியில் "ராமே ராஜ்யம் பிதுரபிமதம்" என்றச்லோகத்தில் சரமபாதமிது. (துர்விஜ்ஞாந) என்பதுதான் சுத்தபாடம்; வியாகரணத்திற்குப் பொருந்தினது அதுவே. பலலிபிகளிலும் அச்சேறியுள்ள பாதுகாஸஹஸ்ரத்தில் ஒன்றிலும் உமது அசுத்த பாடம் காணநேராது. 'அஸர்வஜ்ஞ துர்ஜ்ஞேயம்' இத்யாதியையெடுத்து துர்க் கடவ்ருத்தியில் க்லிஷ்ட கதியில் ஸமர்த்தமைபண்ணியிருப்பதுண்டு. "ப்ரக்ஷாளநாத்தி ந்யாய முணர்வீரே. (துர்விஜ்ஞாந) என்பது அசுத்தம், அநந்விதம் என்றெண்ணித் திருந்திவிட்டீர். பலபலமருள்களுக்கு இஃதொன்றே எடுத்துக்காட்டு. முதலில் அபிநந்தன ச்லோகம் அவ்யுத் பந்ந க்ருதம்: (அஸாரௌ) என்பதற்கு எப்படி விக்ரஹமென்று வினவினால் எங்கள் திருமாளிகையில் அநாதியாக ஸாளக்ராமாராதனமேயொழிய விக்ரஹாராதனமில்லையேயென்பர்.

## மதுரேண ஸமாபயே

ஸ்ரீமந் மதுராந்தக ஸ்வாமின்! தேவரீருக்கும் அடியேனுக்கும் ஏறக்குறைய நாற்பது வருஷங்களுக்கு மேலாக நட்பு உள்ளது. இடையிடையே நமக்குள் வாதப்ரதிவாதங்களினால் மனவேறுபாடு நேர்ந்தாலுங்கூட தேவரீருடைய பரமக்ருபையானது ஸர்வேச்வரனுடைய க்ருபைபோல அடியேனைவிடாமல் ஈர்த்துக்கொண்டே வருகின்றது. இதை அடியேன் மஹா ஸுக்ருத பலமாகவே மதிக்கின்றேன். இப்போது அடியேனுடைய சில ஸவிநய விஜ்ஞாபனங் களைத் திருவுள்ளமுவந்து ஏற்றருளவேணும். தேவரீர் வெறும் வித்வானன்றிக்கே பரமை காந்தியாகவுமுள்ளபடியால் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை அகலவிடாமல் தத்வார்த்தங்களில் தடுமாற்றமின்றிக்கே தேசிக திவ்யஸூக்திகளுக்கு விப்லவமோ உபப்லவமோ நேராதபடி ஸம்ப்ரதாய ரக்ஷை பண்ணவேணும்.

நாம் இதர மதஸ்தர்களைப்போலே ஏகவேதாந்திகளல்லோம். உபயவேதாந்த ப்ரவர்த் தகாசார்யர்களென்று சிறந்த விருது பெற்றிருக்கிறோம். ஸ்வாமி தேசிகன் "செய்யதமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று ஸசதித்த தாக தேவரீரும் கண்ணீர்ப் பெருக்கோடே பேசுவதுண்டல்லவா? இது ஸஹ்ருதயமாக இருந்தால்,

"தெளியாத மறை நிலங்களில் கலக்கமான பொருள்கள் இன்னின்னவை;
செய்ய தமிழ்மாலைகளால் நாமுணர்ந்த தெளிபொருள்கள் இன்னின்னவை"

என்று மகுடமிட்டு ஒரு ஏழெட்டு பொருள்களையாவது உபந்யஸித்தருளவேணும் என்று தேவரீருடைய திருவடிவாரத்திலே சிலர் வணங்கி வேண்டினால் தேவரீர் எந்தெந்த பொருள் களை அந்த வகுப்பில் எடுத்து அருளிச்செய்யலாகும்? என்று கேட்கிறேன். ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்றருளிச் செய்த சூர்ணிகையைக் கொண்டு அடியேன் நூற்றுக் கணக்கான உபந்யாஸங்களைச் செய் திருக்கிறேன், செய்து வருகின்றேன். தேவரீருடைய முன்னிலையிலும் பல சொற்பொழிவு களாற்றியிருக்கின்றேன். த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வமென்கிற நூலை ஆசந்த்ரார்க்க ஸ்தாயியாகவுமிட்டிருக்கின்றேன். அஃதொன்றோ, மற்றும் பலவுமுள.

அந்தபரம்பரையாகச் சிலவிஷயங்கள் தொடர்ந்துவந்தால் அவற்றை மஹாவிவேகியான தேவரீருமா ஆதரிப்பது. ப்ராமாணிகரான தேவரீருடைய நெஞ்சமுருக ஓரே விஷயம் விஜ்ஞாபிக்கிறேன்; வீணான மதப்பித்தை விட்டும், "மதிதௌர்பல்யாத் ந மத தௌர்பல்யம்" என்று கூறியோடுகிற பேயர்களின் திரளில் புக்கிருப்பதைவிட்டும் பரமக்ருபையுடன் திருவுள்ளம் பற்றவேணும்.

## அற்புத மானதொரு ஸ்ரீபாஷ்யஸூக்தி

சாரீரகமீமாம்ஸையில் சரமஸூத்ரம் "அநாவ்ருத்திச் 'சப்தாத்' அநாவ்ருத்திச் சப்தாத்" என்பது. முக்தியடைந்தவன் திரும்பிவருதலுண்டா இல்லையா? என்பது சங்கை. "நச புநரா வர்த்ததே நச புநராவர்த்ததே" என்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே திரும்பிவருதல் இடையாது என்பது ஸூத்ரம் காட்டின பரிஹாரம். இதர பாஷ்யகாரர்கள் இவ்வளவுதானே உரைசெய்து முடித்தது. "*ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே*" என்று ப்ரதிஜ்ஞைபண்ணித் தொடங்கின நம் பாஷ்யகாரரும் இவ்வளவுதானே உரைத்தருளக் கடமைப்பட்டவர். தேவரீருக்கு ஸ்ரீபாஷ்ய பரிசயமுமுண்டே. மஹாஜ்ஞான நிதியான ஸ்ரீமத் கருடபுரம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்ரீபாஷ்யமதிகரித்ததை அடியேன் கண்டுமிருக்கிறேனே. ஆன்ற தமிழ்மறைகளாயிரமும் மொய்ம்பால் வளர்த்த இதத்தாயான எம்மிராமானுசன் இதர பாஷ்யகாரர்களைப் போலே ஸூத்ரஞ் சொன்னவளவிலே நில்லாமல் ஸூத்ரத்தோடு ஸம்பந்தப்படாமல் "நச பரம புருஷஸ் ஸத்யஸங்கல்ப:" என்று தொடங்கியருளிச்செய்த ஸூக்திகளின் மருமத்தை ஸ்ரீமத் கருடபுரம் ஸ்வாமி அருளிச் செய்யாதிருப்பரோ?

உபநிஷத்தில் "ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி" என்று ஈச்வரலாபம் சேதநனுடையதாக ஓதியிருக்க, அதற்குமுரணாக 'அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் *லப்த்வா*" என்று சேதநலாபம் ஈச்வரனுடையதென்று நம் பாஷ்யகாரர் ஸாதிகதிருப்பது எது கொண்டு? என்று தேவரீரை மடிபிடித்துக் கேட்கிறேன். அல்பஜ்ஞனான அடியேன் கேட்பதிருக்கட்டும்; மஹாப்ராஜ்ஞரான தேவரீர் ஸ்வயம் விமர்சித்தருள வேண்டாவா? ***அயம் லப்த்வா*** என்று உபநிஷத்து ஓதியிருக்க, *அமும் லப்த்வா* என்று ஸ்வாமியருளிச் செய்திருப்பது எங்ஙனே? என்று கேட்டால், ***அங்குலீக்ருத்தஸாரா***: என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸாதிக்கிறபடியல்லாமல் ப்ரமாண சரணராய்ப் பகர்ந்தருள வேண்டாமா?

ஸர்வேச்வரன் ஒரு சேதநனைப் பெறுவதற்குப் படாதபாடுகளும்பட்டு, பெற்றபின்பு அவனையா திருப்புவன்? சாஸ்த்ரம் "புநராவர்த்ததே, புநராவர்த்ததே" என்று ஓதிவைத்தாலுங்கூட ஸத்யஸங்கல்பனும் பரம ரஸிகனுமான ஸர்வேச்வரன் ஸ்வலாபத்தை எப்படியையா இழப்பன்? என்று கேட்கிற நம்மிராமானுசர்க்கு என்னவிடை கூறுவீர் ஸ்வாமிந்! பரகத ஸ்வீகாரமென்பதன் பரிணதமான பொருளைக்காட்டும் ஸ்ரீஸூக்தியன்றோவிது. கீதையில் "அநந்யசேதாஸ் ஸததம்" என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்தில் நாயமாத்மாச்ருதியை அண்டை கொண்டு "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே" என்றருளிச் செய்தவரும் நம் பாஷ்யகாரரே கிடீர். செய்ய தமிழ்மாலைகளோதித் தெளியாத மறைநிலங்கள் தெளியும் பரிசுகள் இவையன்றோ. இவையன்றெனில் பின்னை எவையென்று கேட்பார்க்குத் திருவாய் மலர்ந்தருளவேணும். தேவரீரைத் தவிர வேறு யார் சொல்லகிற்பார்.

உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே என்று நாம் சொல்லுகிறபடி, அப்பரமன் நம்மை நோக்கி உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனேயென்று சொல்லுவதாகக் காட்டிலுல்தான் பரகத ஸ்வீகாரமென்னத்தகும் என்று திருவுள்ளம்போலும். (ஸ்தநமத்ய கதா வித்யா) என்றதைக் கண்டு நிஷேக முஹூர்த்தத்தினன்று ஸ்தநமத்யத்தில் வித்யையைத் தேடப்புகுந்த ஜாமாதாவின்

கதையை நினைவூட்டியருளவேண்டா. ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ச்லோகாதிகாரத்தில் ஏக சப்தார்த்த விவரணத்தில் "இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழ் இருத்துமம்மானே!" என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையும், ":வரத! ததகது ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோப மே நோதி யாத் என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியையுங்கொண்டு ஸ்வாமி தேசிகன் விசதீகரித்தருளினவை தேவரீருடைய கண்ணிலோ செவியிலோ பட்டால் ஸ்வகதஸ்வீகாரமென்று வாய்திறக்கவும் வழியிராதே. வழியுண்டானால் ஸாதித்தருளவேணும் ஸ்வாமிந்!

நாற்பதாண்டுகட்கு முன்பு ஒரு சித்திரைத்திருவாதிரையன்று திருநாராயணபுரம் விடைகொண்டு அவ்விடத்து உபயவேதாந்தஸபையில் கீர்த்திமூர்த்தியான பண்டிதரத்னம் லக்ஷ்மீபுரம் ஸ்ரீனிவாஸாசார்யஸ்வாமி திருமுன்பே (அவர் தலைமையில்) ¤நாயமாத்மாச்ருதி யையும் ¤ யானொட்டியென்னுள் இருந்துவமென்றிலன், தானொட்டி வந்தென் தனி நெஞ்சை வஞ்சித்து ஊனொட்டி நின்று என்னுயிருள் கலந்து, இயல்வானொட்டுமோ இனியென்னை நெகிழ்க்கவே ¤ என்கிற பாசுரத்தையும், ¤அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீபாஷ்யதிவ்யஸூக்தியையுமிணக்கி இரண்டு மணி காலம் விஜ்ஞாபித்தேன்; கண்களசும் பொழுகவிருந்து கேட்டவவர் ஸாரமாக ஒரேவார்த்தை ஸாதித்தார்;-இவ்வர்த்த விஷேஷங் கள் ரஸிப்பதற்கு தனிப்பட்ட ஸுக்ருதம் பண்ணியிருக்கவேணும்; ஸுக்ருதபரிபாசேந மஹதா என்ற தேசிகஸூக்தியை ஸ்மரிக்கிறேன் என்று,

ஸ்ரீவீரராகவார்யஸ்வாமிந்! செய்ய தமிழ் மாலைகளையோதின தேவரீருக்குமா ஸுக்ரு தபரிபாகமில்லையாயிருக்கும்! என்று சங்கித்தேன். "தெளியவோதி" என்று ஸாதித்திருக்கை யாலே அங்ஙனம் ஓதவில்லை போலும் என்று ஸமாஹிதனானேன். இதி ப்ரத்யுத்தரப்ரதீக்ஷீ ஸ்ரீவைஷ்ணவதாஸ: அண்ணங்கரார்யதாஸ:-...... 21—11—71.

# மத பேதக் கண்ணாடி

அத்வைதிகளின் கொள்கைக்கும் விசிஷ்டாத்வைதிகளின் கொள்கைக்குமுள்ள வாசியைச் சுருக்கமாக வுணரவிரும்பினால் உண்மையில் ஒன்றேயுள்ளது, பல கிடையா தென்பது அத்வைதிகளின் கொள்கை. விசிஷ்டாத்வைதிகளின் கொள்கையோவென்னில்; உண்மையில் பலபலவுண்டு. சரீரசரீரிபாவத்தையிட்டு ஒன்றென்கிறது. இதேபோல் வடகலையாருடைய கொள்கையென்ன? தென்கலையாருடைய கொள்கையென்ன?

ஒரே வார்த்தையில் சொல்லு என்று ஒருவர் கேட்டால்

## — ஒரே வார்த்தை —

அஸ்மதாதிகளான சேதனர்கள் பலபல செய்தே ரக்ஷை பெறவேண்டும்.
(இது வடகலையாருடைய கொள்கை.)

பரமசேதனன்தலையிலேயே ஸகல பாரமுமுள்ளது.
(இது தென்கலையாருடைய கொள்கை.)

இதை யாரும் மாற்றிச் சொல்ல முடியாது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் 'நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாண நிபுண:" என்றும், "த்ராணே ஸ்வாமித்வமௌசித்யம் ந்யாஸத்யா: ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா கருணா விபோ:" என்றுமுள்ள இரண்டு வசனங்களேபோதும் தேசிகஸித்தாந்தமறிவதற்கு. ஸர்வமுக்தி ப்ரஸங்கமென்பாருடைய வாயை மூடுவிக்க (ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா) என விசேஷித்தது. இங்ஙனே நூறு வசனங்கள் அடைவே வெளிவரும்.

# திருக்கோட்டியூர் நம்பியும் ஸ்ரீராமாநுஜரும்

பஞ்சாசார்ய பதாச்ரிதரென்று ப்ரஸித்தரான எம்பெருமானாருடைய ஆசாரியர்கள் ஐவரையும் தேசிகன் தமது குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்திலும் மற்றொன்றிலும் எடுத்துக்காட்டி, இன்னாரிடம் இன்னது அதிகரித்தாரென்று விளக்கியருளுகையில் "திருக் கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்" என்றருளிச்செய்திருக்கிறார். இதற்குமுன்னே "திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்டார்" என்றருளிச் செய்ததுபோல இங்கும் "திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் கேட்டார்" என்றருளிச் செய்ய வேண்டியிருக்க, அங்ஙனமருளிச் செய்யாமல் "ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித் தார்" என்றருளிச் செய்திருப்பதை ஆழ்ந்து நோக்கவேணும். ஸ்வாமி தாம் ஸாக்ஷாதாசார்ய ரான பெரியநம்பிபக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் க்ரஹித்தாயிற்று. அப்போது பெரியநம்பிகள் ஸ்வாமி திருச்செவியிலே "ஆளவந்தார் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தநிதி வைத்தருளியிருக்கிறார், அதை அவர் பக்கலிலே சென்று பெறுவீராக" என்று நியமித்தபடி யாலே "கோஷ்டீபூர்ண குருடஸத்தி குசலோ யாம் சச்வதாஸேதிவாங்" என்று தொடங்கி பட்டரருளிச்செய்தபடியே திருக்கோட்டியூர்க்குப்பலகால் நடந்து துவண்டு கேட்டு……… எம்பெருமானாரென்று திருநாமம் பெற்றிருக்கிறார் ஸ்வாமி.

திருக்கோட்டியூர் நம்பி எம்பெருமானாரைப் போன்ற பரமகாருணிகரல்லராகிலும் அவர் தாம் உபதேசித்தருளின அர்த்த விசேஷங்கள் இரும்பனன்றுண்டநீர் போல் சுவறிப்போக வேணும் என்று அவர்க்குத் திருவுள்ளமிருந்திருக்கும். அதிகாரிகளின் அருமையையும் அர்த்தத்தின் சீர்மையையும் விளக்குமளவு காணத்தக்கது.

ஸ்வாமிதாம் கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்யாதிகளில் ஆங்காங்கு சேமித்தருளியிருக்கும் அர்த்தங் களை குருகுல விமுகர்கள் எங்ஙனே யுணரமுடியும். 'ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" "அவனை இவன் பற்றும் பற்று அஹங்காரகர்ப்பம் அவத்யகரம், அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்" இத்யாதி ஸ்ரீலோகாசார்யஸூக்திகளையும், "கீழை மேலை வடக்கிலவை புறம்பாக, தன்பற்று உள்ளசல்" இத்யாத்யாசார்ய ஹ்ருதய ஸூக்திகளை யும் அதிகரித்தே ஸ்வாமி தேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை, ந்யாஸதிலகம் முதலானவை யருளிச் செய்தார். "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித் யஜ்ய ந்யஸ்யேத் தேவேது தாம் அபீ:" என்ற ஆளவந்தார் ஸூக்தியின் ரக்ஷையில் தேசிகன் ஸாதித்தருளின ஒருஸூக்தி ஆயிரம் ஸ்ரீ வசன பூஷணமன்றோ. ரஹஸ்யத்ரயஸாரமே

> "¤கர்த்தா சாஸ்த்ரார்த்வத்த்வாத்¤ என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ரா மாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமு மாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும்¤ வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்¤ என்று சொல்லுகிற படியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளே பரங் களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணந்திருக்கிற இவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வமுடையவனோடே துல்யமாக இரண் டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று… ¤என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளேயென்றும் ¤ இசை விததென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ்சொல்லுகிறபடியே உபாய பூதனை அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்" என்றார் [ஹாஹா! லோகாசார்யாதிகளும் இவ்வளவு எழுதவில்லையே]

இத்தனைக்கும் சிகரம் "அத்யர்த்தப்ரியம்ஜ்ஞாநிநம் லப்த்வா ' என்கிற ஸ்ரீபாஷ்யதிவ்யஸூக்தி•

# ஸ்ரீமத் திருக்கள்ளம் ஸ்வாமியின் திருவுள்ளம்

ஸ்ரீமத் அஹோபிலமடாஸ்தான வித்வானாகிய இந்த ஸ்வாமி விசாலமான மனம் படைத்தவர். சென்ற வருஷம் கார்த்திகை மாதத்தில் பெங்களூர் மல்லேச்வரத்தில் நடந்த மாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு மஹோத்ஸவ ஸதஸ்ஸில் அடியேன் இந்த ஸ்வாமியைப் பலரறியக் கொண்டாடியுமிருக்கிறேன். நேற்று வெளிவந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகையில் இந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தைக் கண்டு உகந்தேன். இதில் அடியேனுக்கு ஒன்றுவிவக்ஷிதம் "ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியெழுதுவதற்கு ஒருமுறை பதிலெழுதாமலிருந்துவிட்டால் அவர் ஓய்ந்துவிடுவர்" என்று இந்த ஸ்வாமி யெழுதியிருக்கிறார். இதுவரை அடியேன் அந்த ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளை மறுத்தே பலபல எழுதியவற்றில் ஒன்றுக்குக்கூட அந்த ஸ்வாமீ பதிலெழுதினதில்லை இப்போது அடியேன் இவ்விதழில் அந்த ஸ்வாமியை நோக்கியே எழுதியிருப்பவற்றுக்குமட்டும் அந்த ஸ்வாமி பதில் அநுக்ரஹித்தருளட்டும்; பிறகு தன்னடையே ஓய்வு ஏற்பட்டுவிடும். .... .... (ப்ர—அ)

# கடிதம்

## பாதுகாஸஹஸ்ர திவ்யார்த்த ஸ்தாபனம்

*சென்னை, வங்கிபுரம்—வரதவிஷ்ணுசர்மா.*

பாதுகாஸஹஸ்ரப்ராரம்பத்தில் (ஸ்ரீரங்கப்ருத்த்வீச) என்பதற்கு ஸ்ரீதேவி நீளாதேவி பூமிதேவிகளுக்கு நாதன் என்று அபிநவர் வெளியிட்ட விசேஷார்த்தம் அஸமஞ்ஜஸமென்று காட்டினரொருவர். (ரங்க) என்பதற்கு நீளாதேவியென்று பொருள்கொள்ளுவதற்கு ப்ரமாணமாக எடுத்துக்காட்டின ''பத்மே த்வந் நயநே ஸ்மராமி'' என்கிற சுலோகத்தில் (நீலே! முஹ்யதி கிம் கரோமி மஹி!தை: க்ரீதோஸ்மி தே விப்ரமை:) என்கிற பாதத்தில், மஹி!—தை: என்று பிரித்து, விப்ரமங்கள் பூமிப்பிராட்டியுடையனவேயன்றி நீலாதேவியினுடையவையல்ல என்று நிரூபித்துக் கண்டனம் செய்திருப்பதை ஒப்புக்கொள்ளுகிறோம், (மஹிதை:) என்று ஒரே பதமாகவைத்து நீளாதேவியிடத்தில் அந்வயித்தால் தடுப்பாருண்டோ? அந்த கவி நேரேவந்து எனக்கு இப்படி விவக்ஷையில்லையென்று சொல்லுகிறவரையில் இந்த யோஜனை வெற்றி பெறலாமன்றோ? ஹே நீலே! தே குந்தலே மம மநோ முஹ்யதி, தே விப்ரமைச்ச க்ரீதோஸ்மி என்றுதான் கவிக்கு விவக்ஷையென்று ஒரேயடியாக அடித்து விட்டால் என்ன செய்வர் இந்த ஆக்ஷேபகர்? இதைப்பற்றி நேரில் வந்து கேட்கும் பண்டித கோஷ்டியில் திக்குமுக்கலாடி நிற்க வேண்டி வந்தாலும், வேறுபல வழிகளால் (ரங்க) என்பதற்கு நீளாதேவி அர்த்தம் என்பதை ஸ்தாபிக்கிறோம். நீளாதேவிதான் கோகுலத்தில் நப்பின்னைப் பிராட்டியாக வந்தவதரித்தாளென்பது (நீளா துங்கஸ்தந) சுலோகத்தாலும், யாதவாப்யுதயத்தில் (திசாகஜாநாமிவ சாக்வாணாம்) இத்யாதி ச்லோகங்களாலும் ஸித்தம். அந்த நப்பின்னையை முதன் முதலாக எழுப்புகிற திருப்பாவைப் பாசுரத்தில் (நப்பின்னாய் வந்தெங்கும் கோழியழைத்தன காண்) என்று கோழியின் ப்ரஸ்தாவமுள்ளது. அதிலிருந்து (கோழியுங் கூடலுங் கோயில் கொண்ட) என்கிற பெரியதிருமொழிப்பாசுரம் நினைவுக்குவரும். அங்கே கோழி என்பது உறையூருக்குப் பெயரென்று வியாக்யானமுள்ளது. உறையூர் அரங்கத்திற்குக் கூப்பிடு தூரம். ஆக கோழியும் ரங்கமும் ஒன்றேயாயிற்று. இந்த வழியால் (ரங்க) என்று நீளாதேவியைச் சொல்ல என்ன தடை?

மற்றொரு எளியவழியுமுண்டு (வந்தெங்குங்கோழி) என்றதிலிருந்து கோழியுங் கூடலுமென்கிற பாசுரத்தைப் பிடிக்காமல் (கோழி கூவென்னுமால்) என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தையே பிடித்து, (ஆழிவண்ணர்வரும் பொழுதாயிற்று) என்றிருப்பதைக்கொண்டு (ஆழிவண்ண! நின்னடியிணை யடைந்தேன். அணிபொழில் திருவரங்கத்தம்மானே) என்ற ஏழையேதலன் பாசுரத்தை ஸ்மரித்தால் ரங்கம் கிட்டவேவந்துவிடும். இதனாலும் நீளையைச் சொன்னதாகும். இதைவிட இன்னும் சுலபமான வழியுமுண்டு; திருப்பாவைக் கோழியிலிருந்து நாச்சியார் திருமொழிக் கோழியை. அதாவது (கோழியழைப்பதன் முன்னம்) என்பதைப் பிடிக்கலாம். அதில் (அரவணைமேல் பள்ளிகொண்டாய்) என்றிருக்கையாலே ரங்கம் எளிதாக ஸ்புரிக்கும். இன்னொருவழியுமுண்டு அரவணை மேல் பள்ளிகொண்டாயென்றதிலிருந்து (அரவணையாய் ஆயரேறே) என்கிற பெரியாழ்வார் பாசுரத்தைப் பிடித்து அதில் (துயிலெழாயே) என்றிருப்பதால் அதிலிருந்து (பள்ளியெழுந்தருளாயே) என்பதை ஸ்மரித்தால் அரங்கத்தம்மா வந்துவிடுகிறது. இதனால் (ரங்க) என்பதற்கும் (நீளா) என்பதற்கும் சேர்த்தி எளிதாக ஏற்படும்.

உத்தமோத்தமமான இன்னொரு வழியுமுண்டு. கோழியை விட்டுவிடுவோம். (வந்தெங்குங்கோழி யழைத்தன காண்) என்றதற்குப் பிறகு (குயிலினங்கள் கூவினகாண்) என்றுள்ளது.

திருமாலையில் (குயிலினங்கூவுஞ்சோலை அணிதிருவரங்கம்) என்றிருப்பதால் ரங்கம் எட்டிப் பிடித்தாப்போலாயிற்று. ஆண்டாள் வெறுமனே குயிலென்னுதே குயிலினமென்றுள், ஆலும் என்னுதே (கூவின) என்றுள். இதற்குச்சேர திருமாலையிலும் (குயிலினங்கூவும்) என்றது. நல்ல ஒற்றுமையல்லவா?

தமிழ் வழியே வேண்டாம், ஸம்ஸ்க்ருத வழியையே பற்றுவோம். ரங்கம் ஸீஸம் இவை பர்யாயம். ஸீஸம் என்னத்தக்கவர்கள் சொல்லுகிற அர்த்தமாகையாலே நன்றுகவே பொருந்தும். இப்படி எத்தனையோ வழிகளிருக்க (ரங்க என்பதற்கு நீளா அர்த்தமாகாதென் பவர்கள் மிதமதிகள். இந்த அர்த்தங்களெல்லாம் ஸ்வாமி காலக்ஷேபங்களில் பலகால் ஸாய்க்சுக் கேட்டதே. ஸ்வாமிக்ருபையினுல் எனக்குத் தோன்றின விசேஷார்த்தமும் ஒன்று கேளும். ரங்க என்பதற்கு நீளா என்று அர்த்தம் என்ற போதே சிரிப்பு வரும். அப்போதே (நப்பின்னை காணில் சிரிக்கும்) என்கிற பாட்டு நினைவுக்குவரும் அப்போதே நீளா வந்தபடி யாயிற்று. சாஸ்த்ரீயமான லக்ஷிதலக்ஷணு மரியாதைக்கு எவ்வளவு தூரம் ப்ரயாணமுண்டு என்பதை சாஸ்த்ரஜ்ஞர்களன்றே அறிவார்கள்.

புத்தகங்கொண்டுவா என்பதற்கு ஒருவர் (ரஜ்ஜுமாநய) என்றுர். ரஜ்ஜு என்றுலும் குணமென்றுலும் பர்யாயம். குணமென்று நூலுக்கும் பெயர், நூலென்றுல் புத்தகம்; சரிதானே. எல்லாத்தையும்விட, திருவாய்ப்பாடியில் நப்பின்னைப் பிராட்டியை எல்லாரும் ரங்கம்மா, ரங்கம்மா என்றே அழைத்துக் கொண்டிருந்தார்கள் என்று சுலபமாகச் சொல்லி விடலாம். அதற்கு என்ன அதாரிட்டியென்றுல் (ஸ்ரீரங்கப்ருத்வீச) என்கிற இந்த ச்லோகமே அதாரிட்டி. (ஸ்ரீபூமிகளுக்குநடுவில் (ரங்க) என்று போட்டது வீணுகலாமோ? வ.வ.வி.தாஸ:-

—o—

## உண்மைமொழி என்றேனும் வெற்றிபெறும் (ப்ர-அ.)

அடியேனுடைய வியாஸங்களெல்லாம் பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மை மிக்கவையென்பதை அடியேனே தெரிவித்துக்கொள்வது அழகல்ல. ஒவ்வொன்றையும் ஸமயவிசேஷங்களில் தெய்வம் மெய்ப்பித்தே வருகின்றது. அடியேன் ஒருகால் ஸ்ரீரங்கத்தில் நடந்ததொரு கதையை எழுதியிருந்தேன். அதாவது, அவ்விடத்து ஆண்டவனுச்ரமத்திலிருந்து சில ஸ்வாமிகள் ஸ்ரீகோசஹஸ்தர்களாய் வந்து கொண்டிருக்கையில் அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர்கள் அடியேனுக்குப் பரிசிதர்களாதலால் "என்ன ஸ்ரீகோசம்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டேன், ஆண்டவனுச்ரமத்திலிருந்து வருகிறேம்; அங்கு பரம பதபங்கம் காலக்ஷேபம் ஸாச்சாகிறது, காலக்ஷேபம் முடிந்து வருகிறேம்" என்றுர்கள்; இரண்டு மூன்று தடவையும் பரமபதபங்கம் என்றே சொன்னுர்கள்; அதில் என்ன விஷயம்? என்று கேட்டேன். பரமபதம் இல்லையென்று அத்வைதிகள் சொல்லுகிறுர்களென்றும் அவர்களின் வாதத்தை ஸ்வாமி தேசிகன் பங்கம் செய்தாகிறது என்றும் சொன்னுர்கள். எங்கள் கையிலிருப்பது அந்த ஸ்ரீகோசந்தான் என்றும் சொன்னுர்கள். பரமதபங்கம் என்று க்ரந்தத்தின் பெயரைக்கூட அறியாத இவர்கள் காலக்ஷேபம் செய்கிறபடி என்னே! என்று எனக்கு ஆச்சரியமாயிருந்தது. இதை அப்போதே ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருந்தேன். அடியேன் சில நூல்களில் வெளியிட்டிருக்கின்ற பூர்வபக்ஷங்களுக்கு இப்படிப்பட்ட பரமபதபங்க காலக்ஷேபபரர்கள் தாராளமாக பதிலெழுதி வெளியிடலாமென்று எழுதியிருந் தேன். அப்போது அதைக் கண்டவர்கள் பலரும் "இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான கதை; வீணுகப் பெரியார்களைப் பழிப்பதற்கென்று கல்பித்த கதை; பரமதபங்கமென்று க்ரந்தத் தின் பெயர்கூட அறியாதவர்கள் என்று பழிப்பதற்காகக் கட்டின கதை" என்று வைதார்கள்,

எம்பெருமான் இதைத் திருவுள்ளத்தில் கொண்டிருந்து இப்போது இக்கதையை மெய்ப்பிக்கச் செய்திருக்கிறவொரு காரியம் ஆச்சரியமானது. கேண்மின்; ஸமீபகாலத்தில் ஸ்ரீதாததேசிகனுக்கு நடந்த நானூற்றாண்டு நிறைவு விழாவிற்கு மிகச் சிறந்தவொரு நினைவுமலர் அச்சிட்டார்கள். அதில் தாதாசார்ய குடும்பத்தில் பரிகணிதர்களாயிருந்த பெரியார்களின் திருவுருவப் படங்களை வெளியிட்டு அவர்களின் வரலாறுகளையும் சுருக்கமாக வெளியிட்டிருப்பதில் இருபதாண்டுகட்கு முன்பு பரமபதித்த அய்யா ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமியைப் பற்றியெழுதுகையில் அவர் பரமபதபங்கத்திற்கு வியாக்கியானம் செய்திருப்பதாக அச்சிட்டிருக்கிறது. அம்மலர் உலகம் பரவியுள்ளது. ஐயுறுமவர்கள் எடுத்துப்பார்க்கலாம். இது அச்சுப்பிழையென்று சொல்லிவிடலாம். உண்மையும் அப்படியிருக்கலாம். எழுதியவர் அவிவேகியல்லர்; நல்ல விவேகி. இப்பிழை வேறிடங்களில் விழாமல் இந்த இடத்தில் விழுந்தது வெறுமனன்று. பண்டு பாரதயுத்தத்தில் ஜயத்ரதவதத்திற்காக எந்த பகவான் ஆழியால் ஆழியை மறைத்தானோ, அவனேதான் இங்குபரமதத்தை பரமபதமாக்கிவைத்தானென்பதில் ஸந்தேஹமுண்டோ?

# சமதமார்த்த விசாரம்

மேலே குறித்த தாததேசிகன் நானூற்றாண்டு நிறைவு நினைவுமலரில் ஒரு பண்டிதருடைய கட்டுரையொன்று கண்டோம். அதில் சமதமார்த்த விசார விரிவு காடுபாய்ந்திருப்பதையுங் கண்டோம். இந்த விசாரம் முதன் முதலாக ஸ்ரீராமாநுஜன் 203ல் நாம் ப்ரஸங்கித்தது. அதை இங்கு சுருக்கமாக அநுவதிக்கிறோம்.

## மணவாளமாமுனிகளின் பரமப்ராமாணிகத்வம்

ஸ்ரீவசநபூஷணத்தில் (96.) "ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்" என்பதொரு சூர்ணிகை. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "சமமாவது அந்த: கரண நியமநம்; தமமாவது பாஹ்யகரண நியமநம்" என்றருளிச்செய்து இதற்குப்ரமாணங் காட்டியருளத் திருவுள்ளம்பற்றி "¤சமச் சித்தப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச் சேந்த்ரிய நிக்ரஹ:¤ என்னக்கடவதிறே" என்று ஒரு ப்ரமாணம் காட்டி, உடனே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியையும் காட்டவேண்டி "¤க்ஷமா ஸத்யம் தமச் சம:¤ என்கிறவிடத்தில் 'தமோ பாஹ்ய கரணநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம:— அந்த: கரணஸ்ய ததா நியமநம்' என்றிறே பாஷ்யகாரருமருளிச் செய்தது." என்று கீதாபாஷ்ய ஸூக்தியை யெடுத்துக் காட்டியருளினர். இவ்வளவோடு நில்லாமல் அடுத்தபடியாக "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச் செய்தார். அதன் கருத்து என்னவென்றால், பாஹ்யகரண நியமநம் தம:, அந்த: கரண நியமநம் சம: என்று இப்படியே கொள்ளவேணுமென்கிற நிர்பந்தமில்லை;அந்த:கரண நியமநம் தம: பாஹ்யகரண நியமநம் சம: என்று கொள்ளுவதுமுண்டு என்பதாம். கீழே இரண்டு ப்ரமாணங்களைத் தாமே யெடுத்துக் காட்டிவிட்டு அவற்றோடு ஸம்பந்தப்படாதபடி "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று அருளிச்செய்வது மணவாளமாமுனிகளின் இயல்புக்குச் சேராது; அப்படியிருக்க எங்ஙனே யருளிச் செய்தாரென்று விமர்சிக்க ப்ராப்தம். மேலேகாட்டின ஸ்ரீஸூக்தியில் "மாறிச் சொல்லுவதுமுண்டு" என்னாமல் "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று ஸாதித்திருக்கையாலும், அதுதானும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்தவுடனே ஸாதித்திருக்கையாலும் கீதாபாஷ்யகாரரானஸ்வாமியே மற்றோரிடத்தில் மாறிச் சொல்லி யிருக்கிறாரென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அப்படிஓரிடத்தைத் தாம்காணாமல் அந்தஸ்ரீஸூக்தியை ஒருகாலும் அருளிச் செய்யமாட்டார் மாமுனிகளென்பது ஸத்யம். இதுபற்றியே யன்றோ "பொய்யிலாத மணவாளமாமுனி புந்திவாழி" என்று உலகமெல்லாம் வாழ்த்திப் போருவது.

இனிக்கேண்மின்; அந்தகீதாபாஷ்யத்திலேயே ஸ்வாமி தாமேமாறிச்சொல்லியுள்ளார். (அதாவது)—பதினறுமத்யாயத்தில் முதல் சுலோகத்தில் "தாநம் தமச் ச யஜ்ஞுச் ச" என்றும், இரண்டாம் சுலோகத்தில் "த்யாகச் சாந்தி: அபைசுநம்" என்றும் வருகிறது. அங்கும் தம சமங்களுக்கு விவரணமுள்ளது. கீழே காட்டின விவரணம் பத்தாமத்யாயத்தில் நான்காவது சுலோகத்தின் பாஷ்யத்திலுள்ளது, (16-1, 2ல்) காணும் விவரணம் அதனில் வேறுபட்டது. அந்த: கரண நியமனத்தை தமமாகவும், பாஹ்ய கரண நியமனத்தை சமமாகவும் இங்கு பாஷ்யகாரர் அருளிச் செய்துள்ளார். அவரும் ஸ்வோக்தி விருத்தமாக வருளிச் செய்பவரல்லர். இரண்டு படியையும் அவர் ப்ரமாணஸித்தமாகக் கண்டவராகையாலே ஒரு படியை ஓரிடத்திலும் மற்றொரு படியை மற்றோரிடத்திலும் அருளிச் செய்தார். மணவாளமாமுனிகள் அவருடைய புநரவதாரபூதராதலால் இரண்டு படியும் தமக்கு ஹ்ருத்கதமாயிருக்கையாலே "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச் செய்தார்.

ஸ்வாமி தேசிகனருளிச் செய்த தாத்பர்ய சந்த்ரிகையில் மேலே யெடுத்துக் காட்டிய பதினறுமத்யாய ஸ்தலத்தில்—"ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோர் வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தி காணப்படுகிறது. அது சங்கர பாஷ்யத்திற்கு மறுப்பென்று ஸ்பஷ்டமாக விளங்கா நின்றது. ஆனல் நம் பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திக்கும் மறுப்பாகத் தேறுவதால் இந்த பங்க்தி ப்ரக்ஷிப்தமாயிருக்கு மென்று தோன்றுகிறது. வ்யுத்க்ரமேண சமதமார்த்த வ்யாக்யானம் பண்ணியருளினவர் பாஷ்யகாரருமாதலால் அவருடைய வியாக்கியானத்தை நிரஸ்தமென்று ஸ்வாமி தேசிகன் நெஞ்சாலும் நினையாரன்றோ? பத்தாவது அத்யாயத்தில் பாஷ்ய ஸ்ரீஸூக்தியிருக்கும்படியையும், அங்கு சந்த்ரிகையில் தாம் விசேஷித்து அருளிச் செய்தபடியையும் மறக்க வல்லவரல்லரே தேசிகன். சமம் தமம் என்று இரண்டு பதம் வேண்டியதில்லை; அந்யதர பதமிருந்தாலும் அதற்கே பாஹ்ய ஆந்தர கரண நியமனத்தைப் பொருளாகக்கொள்ள முடியும். ஆனலும் தனித்தனி இரண்டு பதங்களிருப்பது வீணாகாதபடிக்கு அர்த்த பேதம் காட்டுவது யுக்தம் என்று திருவுள்ளம் பற்றி "......பௌநருக்த்ய பரிஹாராய விஷயபேதே வக்தவ்யே நியமந க்ரமேண தமசமயோ: பாஹ்யாந்தரகரண விஷயத்வோக்தி:" என்று சந்த்ரிகையில் ஸாதித்திருப்பதனல் இதற்கும் சேராதபடியன்றோ பதினறுமத்யாயத்தில் சந்த்ரிகை அவதரித்துள்ளது. அன்றியும் "ஏதேந, வ்யுத்க்ரமேண கேஷாஞ்சித் வ்யாக்யாநம் நிரஸ்தம்" என்கிருர்; ஏதேந என்பதற்கு 'பாஷ்யகாரர் இப்படி யருளிச்செய்திருக்கையாலே' என்றுதானே பொருளாகும். நம்முடைய பாஷ்யகாரர் ஸாதித்ததனலே சங்கரபாஷ்யம் எப்படி நிரஸ்தமாகும்? என்கிற கேள்வியோடு முடித்திருந்தோம்.

இந்த நமது கட்டுரையின்மேல் ஏற்கனவே பதில் எழுதி, அடுத்தநாளே பதில் பெற்று ஓய்ந்த பண்டிதரே இப்போது ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதிப்படியிலே எழுதியுள்ளார். கல்வெட்டாக ஒரேவார்த்தை;—நாம் கௌரவமாகத் தெரிவித்திருக்கிறபடி ப்ரக்ஷிப்தமென்று கொள்ளாவிடில், தத்வடீகாஸூக்தியை அத்யந்தம் அஸமஞ்ஜஸமென்றுரே, அதே ரீதியில் இதையும் அஸமஞ்ஜஸமென்று முடிப்பது தவிர ஏழேழ் பிறவியிலும் வேறுவழியில்லையென்பது திண்ணம். சுஷ்கவாக் ஜாலங்களைக்கண்டு மருள்வாராருமிலர். ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:

# ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசாரியார் இயற்றிய உரை நூல்களுக்குச் சுருக்கமான ஜாபிதா.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகையென்னும் விரிவுரையானது நாலாயிரத்திற்கும் ஸ்ரீ ஸ்வாமிகள் இயற்றியது உலகம் பரவியுள்ளது (பதவுரை, கருத்துரை, விசேஷவுரை)

---

## முதலாயிரம்

(எல்லாம் திவ்யார்த்ததீபிகையுடன்)

| | ரூ. | பை. |
|---|---|---|
| திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் | 6 | 00 |
| திருப்பாவை | 1 | 50 |
| சங்கத்தமிழ்மாலை முப்பது, திருப்பாவை ஜீயர் இவை | 2 | 50 |
| திருப்பல்லாண்டு முதல் நாச்சியார் திருமொழிவரை எளியவுரை | 3 | 60 |
| நாச்சியார் திருமொழி தீபிகை | 2 | 60 |
| பெருமாள் திருமொழி தீபிகை | 2 | 00 |
| திருச்சந்த விருத்தம் தீபிகை | 3 | 00 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு தீபிகை | 4 | 00 |

## இரண்டாவதாயிரம்

| | | |
|---|---|---|
| பெரிய திருமொழியாயிரம் திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டக முட்பட (புதிய பதிப்பு) | 28 | 50 |

## மூன்றாவதாயிரம்

| | | |
|---|---|---|
| (இயற்பா) முதல்திருவந்தாதி முதலாக இராமாநுச நூற்றந்தாதி வரை திவ்யார்த்ததீபிகை | 18 | 00 |

## நான்காவதாயிரம்

| | | |
|---|---|---|
| திருவாய்மொழியாயிரம் தீபிகை | 31 | 00 |
| திவ்யாநுஸந்தானவுரை | 5 | 00 |
| திவ்யப்ரபந்தக் கண்ணாடி | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்த இராமன்; ஆழ்வார் களுகந்த கண்ணன் | 1 | 00 |
| உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி ஆர்த்திப் பிரபந்தம் இவற்றின் உரை | 3 | 00 |
| ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்த காதை இவற்றின் உரை | 1 | 00 |

## ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கு உரைகள்

| | ரூ. | பை. |
|---|---|---|
| முகுந்தமாலை, ஸ்தோத்ர ரத்னம், சதுச்ச்லோகி | 2 | 50 |
| கத்யத்ரயம் | 2 | 00 |
| ஸ்ரீவைகுண்டஸ்தவம் | 2 | 50 |
| ஸுந்தர பாஹுஸ்தவம் | 2 | 50 |
| அதிமாநுஷஸ்தவம் | 2 | 50 |
| வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம் | 3 | 00 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் | 2 | 50 |
| ஷை உத்தரசதகம் | 2 | 50 |
| அஷ்டச்லோகி | 1 | 00 |
| ஸ்ரீகுணரத்நகோசம் | 2 | 00 |
| யதிராஜவிம்சதி, நக்ஷத்ர மாலிகை முதலான 16 ஸ்தோத்திரங்கள் உரை | 3 | 60 |
| ஸுதர்சந சதக வியாக்யானம் | 4 | 00 |

## ஆழ்வாராசார்யப் பெருமை நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆழ்வார்களின் வைபவம் | 1 | 00 |
| பூர்வாசார்ய ப்ரபாவம் | 2 | 00 |
| வேதாந்த தேசிக வைபவம் | 1 | 00 |
| மணவாளமாமுனிகள் வைபவம் | 1 | 00 |
| ஐப்பசித் திருமூல மலர்கள் | 2 | 00 |
| நவரத்ன நவநிதி | 2 | 00 |

## ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| முமுக்ஷுப்படிஸாரமென்கிற திருமந்த்ர–த்வய–சரமச்லோகார்த்த விவரணம். | 2 | 00 |
| தத்வத்ரயஸாரம் | 2 | 00 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | 3 | 00 |
| ஆசார்யஹ்ருதயஸாரம் 1, 2 ப்ரகரணம் | 4 | 00 |
| 3 4 பிரகரணம் (அச்சில்) | | |

வேதாந்தப் பொருள் விளக்க நூல்கள் முதலானவற்றுக்கு விரிவான கியாடலாக் காண்க.